4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

## வெளியேற்றப்பட்ட மந்திரிகள் மோதலுக்கு தயார் ?

புதுடெல்லி, ஜூலை 22—

மத்திய அமைச்சரவையிலிருந்து வெளியேற்றப் பட்ட மந்திரி அனுமந்தையாவுக்கு இந்திராகாந்தி கவர்னர் பதவி தருவதாக ஆசை காட்டினார். கவர்னர் பதவி என்பது ஒருவரின் அரசியல் அஸ்தமனத்திற்குச் சமமென்றும், தான் ரயில்வே மந்திரியாகவே நீடிக்க விரும்பியதாகவும், இப்பொழுது மந்திரிப் பதவியிலிருந்து விலக்கப்பட்டது குறித்து வெளியான தவறான விமர்சனங்களுக்கு நாடாளு மன்றத்தில் அறிக்கைவிடப் போவதாகவும் அறிவித்தார்

வெளியேற்றப்பட்ட மற்றொரு மந்திரியான மோயினுல் சௌதிரிக்கும் இந்திரா காந்தி கவர்னர் பதவி கொடுக்க முன்வந்தார். தனக்கு அது வேண்டாம் என்றும் அஸ்ஸாமில் தீவிரமாக அரசியலில், தான் ஈடுபடப் போவதாகவும் அறிவித்தார்.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 23-7-72 ஞாயிறு (மலர் 173



## அமெரிக்க குண்டுவீச்சுகளால்

## வியட்நாமைப் பணியவைத்திட முடியாது

# உறுதியும் ஒற்றுமையும் அதிகரித்துள்ளன

## அமெரிக்க செய்தியாளர் தரும் நெஞ்சை உருக்கும் விபரங்கள்

ஹனோய், ஜூலை. 22—

அமெரிக்கக் குண்டு வீச்சால் ஒருகாலும் வியட்நாமை அழிக்கவே முடியாது. எதற்கும் தயாரான அந்த விடுதலை வீரர்களின்முன்னே அமெரிக்கக் குண்டு வீச்சின் ஜம்பம் பலிக்காது.

இத்தனை கொடூரமான யுத்தத்திற்கிடையிலும் வியட்நாமில் விலைவாசி எப்படி மிகக் குறைந்து இருக்கிறது. எவ்வளவு துரிதமாக நிவாரண வேலைகளை செய்து முடித்து, எப்போதும் போல் சகஜமான வாழ்க்கையைத் தொடர்கிறார்கள் என்பதை நேரில் கண்டு, "ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகையின் ஜூலை 20ம் தேதி இதழில் அதன் சிறப்பு நிருபர் ஜோசப் கிராப்ட் எழுதியுள்ள கட்டுரையின் சில பகுதிகளை இங்கு தருகிறோம்.

வடவியட்நாம் ரேடியோ, டெலிவிஷன் கழகத்தின் தலைவர் திரு. டிராம்லாம் அவர்களை நான் ஜூலை 8-ம் நாள் காலை ஹனோயில் சந்தித்தேன். அப்போது அமெரிக்க விமானங்கள் ஹனோய் நகரத்தின் மீது வெடிகுண்டு வீசிக்கொண்டிருந்தன.

நாங்கள் ஒரு விமானப் பதுங்கு குழிக்குள் சென்றோம். மின்சாரம் தடைப்பட்டிருந்ததால் அந்தஇடம மிகவும் கதகதப்பாக இருந்தது. உடனே குளிர்ச்சியை ஏற்படுத்துவதற்காக திரு. லாம் தன் பைக்குள்ளிருந்த சிறிய கற்றூடியை எடுத்து முகத்தின் அருகில் வீசத்தொடங்கிவிட்டு கீழ்வருமாறு கூறினார்.

### வாழ்வு காற்றூடியைபோல

"நிக்சன் வேண்டுமானால் எங்களது மின்சக்தி நிலையங்களை தகர்க்க முடியும். ஆனால் எங்களது கை விசிறிகளை ஒன்றும் செய்ய முடியாது" என்றார். அந்த கசப்பான ஆனால் இனிமையான விமர்சனம், ஜான்சனால் நடத்தப்பட்டுவரும் கொடிய வெடிகுண்டு வீச்சு ஏற்படுத்தியுள்ள விளைவுகளை நன்றாகப் பிரதிபலிக்கிறது. ஆம்! வடவியட்நாமில் வாழ்க்கை அந்த நாட்டுப்புற சிறிய காற்றூடி போல் தான் இயங்குகிறது. மின்சக்தி நிலையங்களை தகர்ப்பதற்கென்றே உருவாக்கப்பட்ட அந்த நாசகார ஆயுதங்களால் வியட்நாம் நாட்டை அழிக்கவே முடியாது.

### நெசவாலைகள் நாசமாக்கபட்டன

உண்மையில் அமெரிக்க வெடிகுண்டு வீச்சு மிகப் பயங்கரமான சேதத்தைத் தான் விளைவித்திருக்கின்றன. தென்வியட்நாமையும் வியட்நாமின் பல முக்கிய நகரங்களையும் இணைக்கும் நூற்றுக்கணக்கான ரயில், ரோடு பாலங்கள் துண்டிக்கப்பட்டுள்ளன. யுத்தத்திற்கு உதவும் எந்தத் தொழிலும், உதாரணமாக நாம்டின் நகரிலுள்ள நெசவாலைகள் அனைத்தும் தரை மட்டமாக்கப்பட்டுள்ளன.

ஹைபாங் துறைமுகத்தின் மீது வெடிகுண்டு வீச்சு நடந்து முடிந்தபோது நான் சென்று பார்த்தேன், என் சொல்வேன்!-அந்தப் பகுதி முழுவதும் சந்திரனின்மேல் பரப்பு போல் குண்டும் குழியுமாக காட்சியளித்ததை என் இரு கண்களால் கண்டேன்.

### அழித்தாலும் ஆக்கப்படும்

ஆனால் வாழ்வும், போர் நடவடிக்கைகளும் என்னமாய் சேர்ந்து இணைந்து நடக்கிறது தெரியுமா? பாலங்கள் உடைக்கப்பட்டதுதான் தாமதம், உடனே அங்கு சிறுபடகுகள் சர்வீசும் கைப்பாலங்களும் (நீருக்கடியில் காலிடின்களை வைத்து அதற்குமேல் மூங்கில்களையும் மண்ணையும் போட்டு நிரப்பி மேலே ரோடு போடுவது)தோன்றுவதைப் பல இடங்களில் கண்டேன்.

"இந்தக் கைப்பாலங்களை அமைப்பதில் எங்களுக்கு இணையாக இந்த உலகில் ஒருவரும் இல்லை" என்று பெருமையுடன் ஒரு பத்திரிக்கை ஆசிரியர் குறிப்பிட்டார்.

ஏராளமான டிரக்குகளும் பஸ்களும், கார்களும், சைக்கிள்களும் ஹனோயையும் ஹைபாங்கையும் மற்ற இராணுவ தளங்களையும் இணைக்கும் பகுதிகளுக்கு அணி அணியாகச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

### உடனே போக்குவரதது தொடர்பு

ஹனோயிலிருந்து நீராவி இன்ஜின்களால் இழுக்கப்பட்டு சரக்கு வண்டிகள் ஹைஃபாங்கை நோக்கியும் தெற்குப் போர் முனைகளை நோக்கியும் சென்று கொண்டிருக்கும் காட்சிகளையும் கண்டேன்.

அடுப்பெரிக்கும் எரிவாயு ரேஷன் இல்லாமல் தாராளமாகக் கிடைக்கிறது. உணவுப் பொருட்களும மற்றும் தேவையான பண்டங்களும் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றன.

ஒரு அரசாங்க பண்டகசாலைக்கு நான் சென்றபோது அங்கு ஏராளமான செருப்புகள் தேங்கிக் கிடப்பதைக் கண்டேன். எனவே செருப்புகளின் விலை குறைக்கப்பட்டு ரூ 37க்குவிற்ற ஒரு ஜோடி செருப்பு ரூ 21க்கு விற்பதை கண்ணுற்றேன்.

### குறைந்த விலையில் உணவுப் பொருட்கள்

சந்தையில் ஏராளமான பழங்கள், உலர்ந்த மீன்கள் காய் கறிகள், அரிசியும்விற்பதை பார்த்தேன். வாத்துகளுக்கு அப்போது காலமாதலால் மிகக் குறைந்த விலைக்கு நூற்றுக்கணக்கான வாத்துகள் விற்கக் கண்டேன், ஒரு வாத்தின் விலை எவ்வளவு தெரியுமா? வெறும் 30 செண்ட்கள் தான்.

வெடிகுண்டு வீச்சுகள் வியட்நாமை முடமாக்க முடியவில்லை. மாறாக அது மக்களை ஒரு உணர்வு பூர்வமான ஒரு அன்பு வலையால் ஒன்றிணைந்திருக்கிறது.

### வெடி குண்டுகளின் கோரம்

அமெரிக்க வெடி குண்டு விமானங்கள். வீடுகளுக்கும்,

(4-ம் பக்கம் பார்க்க)

# சோவியத் உதவியாளர் வெளியேற்றம் ஏன்?

## எகிப்திய 'ஏடு' கூறும் காரணம்

கெய்ரோ. ஜூன். 22—

சென்ற மே மாதத்தில் அமெரிக்கத் தலைவர் நிக்சனும், சோவியத் தலைவர்களும் மத்திய கிழக்கில் இரு வல்லரசுகளும் புதிதாக சக்திவாய்ந்த ராணுவ ஆயுதங்களை எந்த தேசத்திற்கும் தந்து கெடுபிடி நிலையை உயர்த்துவதில்லை என்று செய்துகொண்ட ஒப்பந்தத்தின் விளைவே, எகிப்திலிருந்து சோவியத் ராணுவ உதவி நிபுணர்களை வெளியேற்றுவதற்கான காரணம் என்று "அல் அஹரம்" என்ற எகிப்தியப் பத்திரிகை எழுதுகிறது.

### அமெரிக்க-சோவியத் ஒப்பந்தம்

நிக்சன்—சோவியத் தலைவர்கள் செய்து கொண்ட இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகு, எகிப்து கோரிய ஆயுதங்களை சோவியத் அரசு தர மறுத்ததாகவும், அந்த ஏடு எழுதுகிறது அதே சமயத்தில், இஸ்ரேல் ஏற்கனவே அமெரிக்காவுடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி நவீன ஆயுதங்களை அமெரிக்காவிடமிருந்து தொடர்ந்து பெற்று வருவதாகவும் குறிப்பிட்டது.

"இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டதனால் தான், சோவியத் ராணுவ உதவியாளர்களை எகிப்திலிருந்து திருப்பி அனுப்பிவிட வேண்டிய நிர்பந்தம் எகிப்திய ஜனாதிபதி சதாத்திற்கு ஏற்பட்டது. இவ்வாறு மாஸ்கோ உச்சகட்ட மாநாட்டின் விளைவுதான் இது என்ற உண்மையை நாங்கள் ஒளிவு மறைவின்றி அறிவிக்கவேண்டியுள்ளது" என்று எகிப்திய ஏடு அல் 'அஹரம்' அறிவிக்கிறது.

### அமெரிக்காவில் மகிழ்ச்சி

சோவியத் நிபுணர்களை வெளியேற்றியது தனக்கு 'மிகவும் நம்பிக்கை அளிக்கும் செய்தி" என்றும் இப்படிப்பட்டதொரு நிலைமை ஏற்பட்டதற்கு ஜனாதிபதி நிக்சனும் தானும் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் தாம் என்று அமெரிக்கபாதுகாப்பு இலாகா அமைச்சர் மெல்வின்லெயர்ட் வாஷிங்டனில் அறிவித்தார்.

### நீதிக்குச் சமாதி




போலீஸ் துப்பாக்கி சூட்டினால் விவசாயிகள் மாண்டதற்கு நீதி விசாரணை வேண்டியதில்லை என சிண்டிகேட், இண்டிகேட், வலது கம்யூனிஸ்ட் முதலிய கட்சிகள் ஒப்புக் கொண்டு ஒப்பந்தம் செய்தன.

## அலிகார் கலவரத்தில் அதிகம் கொடுமை புரிந்தது

# போலீசே - இந்துக்களல்ல

## பிரதமரின் தூதுவர் தகவல்

புதுடெல்லி, ஜூலை, 14—

உத்திரப்பிரதேசத்தில் அலிகார் பல்கலைக் கழக சம்பந்தமாக கலவரம் நடந்தது தெரிந்ததே. இதைப் பற்றி, நேரடியாக விசாரித்து, பிரதம மந்திரி இந்திராகாந்தியிடம்தகவல் கொடுக்க, பேராசிரியர் சாந்திமாய்ராய் என்பவர் தெற்கு வாரணாசிப்பகுதியில் சுற்றுப்பயணம் செய்தார்.

### கொலை கொள்ளை தான்

பேராசிரியர் சாந்திமாய்ராய் (தேசிய ஒருமைப்பாடு குழுவின் அங்கத்தினர் ஆவார். அவரையும் போலீசார் கைது செய்தனர். தெற்கு வாரணாசிப் பகுதியில் தாம் கண்டதைப்பற்றி இந்திரா காங்கிரஸ் ஏடான "நியூ வேவ்" பத்திரிகையில் ஒரு பேட்டியில் அவர் கூறியிருப்பதாவது:—

தெற்கு வாரணாசிப் பகுதியில்தான் அதிகமான பாதிப்பு இருந்தது. பல வழிபாட்டு இடங்கள் தாக்கப்பட்டன. நூற்றுக்கும் அதிகமான வீடுகள் நாசமாக்கப்பட்டன. துணிமணிகள் பணம் கொள்ளையடிக்கப்பட்டன. கைத்தறிகள் ஆகியவை உடைக்கப்பட்டன. பெண்கள்கற்பழிக்கப் பட்டனர்.

### போலீஸ்கொடுமை தான் அதிகம்

நான் பாதிக்கப் பட்டவர்களிடம் யார் உங்களைத் தாக்கினார்கள் என்றுகேட்டபோது இந்துக்கள் எங்களைத் தாக்கவில்லை என்று பெரும்பாலானவர்கள் கூறினார்கள். நாங்கள் பக்கத்து வீடுகளில்அன்போடுவசிக்கிறோம். ஆனால் தாக்குதல், போலீசின் தலைமையில், குறிப்பாக பிராந்திய ஆயுதப் போலீசின்தலைமையில்தான் நடந்ததுஎன்றுகூறினார்கள்

அரசாங்கம். தீவிரமாகப் பரிசீலித்து, நடவடிக்கை எடுக்கவேண்டும் என்னை போலீசார் பிடித்தனர். மிகக்கேவலமான வார்த்தைகளால் திட்டினர். நான் யாரென்றும்- பிரதமருக்கு தெரிவிக்கவே தகவல் சேகரிக்க இங்கு வந்திருக்கிறேன் என்றும் கூறியபின். மேலதிகாரி தலையிட்டு மன்னிப்புக் கோரி விடுவித்தார் என்று கூறினார்.

## தீக்கதிர் விற்பனையை உயர்த்துவீர்

### மாநில செயற்குழு வேண்டுகோள்

அன்புள்ள தோழர்களே,

நம் கட்சியின் மகத்தான 9-வது மாநாடு மதுரையில் வெற்றிகரமாக முடிவடைந்துள்ளது. கட்சி மாநாட்டில் உருவாக்கப்பட்டுள்ள கொள்கைகளை விளக்கி கட்டுரைகள் தீக்கதிரில் வெளிவந்துகொண்டிருக்கின்றன.

கட்சியின் கொள்கைகளையும், இயக்கச் செய்திகளையும் மேலும் மேலும் அதிகப்படியான மக்களிடத்தில் பிரச்சாரம் செய்ய நம் பத்திரிகையின் விற்பனையை உறுதிப் படுத்தவும், உயர்த்தவும் கட்சியின் எல்லாக் கமிட்டிகளும், தீவிர கவனம் செலுத்தவேண்டுமென்றும், பில் பாக்கிகளை உரிய காலத்தில் அனுப்பி வைக்க உணர்வு பூர்வமாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறோம்.

தீக்கதிர் விற்பனை விபரங்கள் கட்சியின் எல்லா மாவட்டக் குழுக்களுக்கும் தெரிவிக்கப்பட்டுள்ளன. அவற்றின் அடிப்படையில் உடனடியாகத் திட்டமிட்டு தீக்கதிர் பத்திரிகையின் விற்பனையை அதிகரிக்கும்படி தோழர்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறோம்.

புரட்சி வாழ்த்துக்கள்,
தோழமையுள்ள,
தமிழ் மாநில செயற்குழு,

மதுரை,
22-7-72

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

# தீக்கதிர்

## கல்வி அமைச்சரின் வடிகட்டிய பிற்போக்குத்தனம்

கல்வி சம்பந்தமாகவும், ஆசிரியர் மாணவர் சம்பந்தமாகவும் கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் கொண்டுள்ள பல கருத்துக்கள் மிகமிக பிற்போக்கானவை என்பதற்கு சமீபத்தில் நடந்து முடிந்த ஆசிரியர்கள் போராட்டம் ஒரு உதாரணம்.

எஸ். எஸ். எல். சி. பரீட்சையை இரண்டாகப் பிரித்து ஒன்று எஸ். எஸ். எல். சி. படிப்போடு நிறுத்திக் கொள்ள விரும்பும் மாணவர்களுக்கு இலகுவான கேள்வித் தாள்களும், கல்லூரிகளுக்கு போக விரும்புவோருக்கு கடினமான கேள்வித்தாள்களும் கொடுக்க ஏற்பாடு செய்யப் போவதாக அமைச்சர் நெடுஞ்செழியன் சமீபத்தில் மிரட்டியுள்ளார்.

போலித்தனமான, பிற்போக்கான எண்ணங்களின் மொத்த உருவமே அமைச்சர் நெடுஞ்செழியனின் நடைமுறைக் கல்விக் கொள்கை. நெடுஞ்செழியனின் தத்துவ குருவான பெரியார் இராமசாமி அவர்களே வேறு கோணத்திலிருந்து இதை தாக்கியுள்ளார். ''பார்ப்பனீய''த்தை கல்வித்துறையில் புகுத்தும் முயற்சி இது என்று கண்டனம் செய்தார்.

கல்வி அமைச்சரின் திட்டம் ''ஜாதீய''த்திட்டமல்ல, மாறாக ''தகுதி'' என்ற பெயரில் மாணவர்களை வடிகட்டி, மேல்படிப்பிற்குப் போகாமல், காலை ஒடித்துப் போடும் திட்டம். படித்தோரிடையே நிலவும் வேலையில்லாத் திண்டாட்டத்தை ''குறுக்கு'' வழியில் தீர்க்க முயற்சிக்கும் முதலாளித்துவத்திட்டம் இது. ''வறுமையை ஒழிப்ப''தாகக் கூறிக்கொண்டு வறியவர்களையே ஒழித்துவரும் இந்திரா காந்தி - பாணித்திட்டம்.

எஸ். எஸ். எல். சி. தேர்வில் மிகக் குறைந்த மதிப்பு எண்கள் வாங்கிய மாணவர்கள் பலர் பி. யூ. சி யிலும், அதற்கு மேல்படிப்பிலும் மிக உயர்ந்த மதிப்பெண்களைப் பெறும் உதாரணங்கள் எத்தனையோ உண்டு. படிக்க வசதிக் குறைவு, வீட்டிலுள்ள வறுமை, அன்னிய மொழியான ஆங்கிலப் பாடம் போன்ற பல இடையூறுகளால் பாதிக்கப்படும் மாணவன் எஸ். எஸ். எல். சி. போன்ற ஆரம்பப் படிவங்களில் குறைந்த மார்க்குகள் வாங்கிய போதிலும், நாளாக ஆக சமாளித்துக் கொண்டு நன்றாகப் படித்து முன்னேறும் உதாரணங்கள் எத்தனையோ உண்டு. பெரும்பாலும் ஏழைக் குடும்பங்களில் பிறந்த மாணவர்களின் நிலை இது.

இந்த உண்மையை, மாணவர்களுக்குபோதிக்கும் ஆசிரியர்களையும் பெற்றோர்களையும் கேட்டால் தெரியும்.

இளம் வயதில் நல்ல மார்க்குகளை வாங்கும் குழந்தைகள் மேலே போகப்போகக் குறைவான மார்க்குகள் வாங்கும் நிகழ்ச்சிகள் பலவும் உண்டு. எனவே தேர்வு எண்களை மட்டும்வைத்து எஸ்.எஸ்.எல்.சி. படிப்புமட்டத்தில் தீர்ப்புக் கூறிவிடவேண்டாம். ''இளமையில் கல்வி'' யூட்டுவதற்குப்பதிலாக இளமையிலேயே அவர்களது கல்வித் திறனைக் கொல்வதற்குத் திட்டப்படும் திட்டமே நெடுஞ்செழியன் திட்டம்.

படித்துப் பட்டம் பெற்றோருக்கு வேலை தரும் திட்டங்களையும் அதற்குத் தேவையான மாற்றங்களையும் செய்யும் திசைவழியில் சிந்தனையை ஓட்டாமல் ''முளையிலே கிள்ளி'' எறியும் கொலைகாரத் திட்டத்தை அமுல் நடத்த விரும்புகிறார், தானும் ஒரு ''சமதர்மி'' என்று பசப்பிடும் கல்விஅமைச்சர்.

இத்தகைய பிற்போக்குத் திட்டத்தை அமுல் நடத்தினால், கல்வித்துறை என்பது லஞ்சம் கொடுத்து எப்படியாவது தங்கள் பிள்ளைகளை உயர்த்திக் கொள்ளும் பணக்காரர்களின் கூடாரமாகி விடும் என எச்சரிக்கிறோம்.

இத்தகைய திட்டத்தை அமுல் நடத்த முன் வந்தால், அதன் பிறகு கல்வித்துறையில் அமைதி நிலவாது என்றும் எச்சரிக்கிறோம்.

## அமைச்சர் மாதவனுக்கு வி. பி. சிந்தன் மறுப்பு

சென்னை, ஜூலை. 20—

தீவிரவாதிகளாலும், சில சந்தர்ப்பவாத அரசியல் கட்சிகளாலும்தான் தொழிலமைதி குறைந்திருப்பதாக அமைச்சர் மாதவன் பேசியிருப்பது தி. மு. கழகத்தினரின் வன்முறைச் செயலை மூடி மறைப்பதாகும் என்று தோழர் வி. பி. சிந்தன் கூறியிருக்கிறார்.

இது குறித்து அவர் விடுத்துள்ள ஓர் அறிக்கையில் மேலும்கூறியிருப்பதாவது:-

சந்தர்ப்பவாத அரசியல் கட்சிகள் என்று அமைச்சர் மாதவன் மொட்டையாகக் கூறியிருக்கிறாரே தவிர எந்தக் கட்சி என்று குறிப்பிடக் கூறவில்லை.

ஆயுதந் தாங்கியபடியே அலைந்து, சிம்சன் தொழிலாளர்களைத் தாக்குவதும், தி. மு. க. அல்லாத தொழிலாளர்களின் வீடுகளில் புகுந்து தாக்குவதும் தி. மு. க. வினர்தான். திறந்துள்ள தொழிற்சாலைகளில் எல்லாம் வேலைக்குச் சென்ற தொழிலாளர்களைத் தாக்கி, அமைதியின்மையை ஏற்படுத்தி, திறந்திருக்கும் தொழிற்சாலைகளை மூடச் செய்வதும் தி. மு. க. வினர் தான்.

இந்த வன்முறைச் செயல்களைச்செய்பவர்களை அடக்கி தொழிலமைதியை ஏற்படுத்துவதற்குப் பதில் யார்யார் மீதோ குற்றம் சாட்டுவது அரசாங்கம் தனது பொறுப்பைத் தட்டிக்கழிப்பதாகும்.

இவ்வாறு தோழர் வி. பி. சிந்தன் தனது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

## கோவை எஞ்சினீயரிங் தொழிலாளர் போராட்டம்

### சிறையில் 50 பேர்கள்

கோவை, ஜூலை 19—

கோவை நகரிலுள்ள இஞ்சினீயரிங் தொழிற்சாலைகளில் பெரிய இஞ்சினியரிங் தொழிற்சாலையான பி. எஸ் ஜி யில் சுமார் 1500 தொழிலாளர்கள் வேலை செய்து வருகின்றார்கள். மேற்படி தொழிற்சாலைத் தொழிலாளர்கள் சம்பளம், பஞ்சப்படி, பர்மனெண்ட் செய்தல், பீஸ்ரேட் முறையை ஒழித்தல் உட்பட 19 அம்ச கோரிக்கைகள் வைத்து 13—6—72 முதல் வேலை நிறுத்தஞ் செய்து வருகிறார்கள்.

இந்த வேலை நிறுத்தத்தை கோவை ஜில்லா ஜெனரல் இஞ்சினீயரிங் அன்ட் மெக்கானிக்கல் தொழிலாளர் சங்கம் (சி ஐ டி யூ), ஐ என் டி யூ சி., தி மு க, எச் எம் எஸ் பல துறை தொழிலாளர் சங்கம் ஏ ஐ டி யூ சி, ஆகிய சங்கங்கள் ஒன்றாக சேர்ந்து கூட்டுக்குழு அமைத்து, அந்த கூட்டுக்குழுவின் தலைமையில் போராடி வருகிறார்கள்.

மேற்கூறப்பட்ட அனைத்துச் சங்கங்களும் ஒன்றாகச் சேர்ந்து கூட்டுக்குழு அமைத்து ஒன்றுபட்ட பல்வேறு கிளர்ச்சிகள் செய்த பின், லேபர் ஆபீசர் நேரடியாகபேச்சுவார்த்தை நடத்தியும், பயனேற்படாததால், நிர்வாகிகளின் பங்களாக்களின் முன் 10 பேர்கள் வீதம் மறியல் செய்வதென முடிவு செய்து அதன்படி 15—7—72 முதல் தொடர்ந்து மறியல் செய்து வருகிறார்கள். சுமார் 50 பேர்களுக்கு மேல் கைது செய்யப்பட்டு சிறைக்குள் இருக்கிறார்கள்.

#### ஹெவி காஸ்டிங் தொழிற்சாலையில்

கோவை பெரியநாயக்கன் பாளையம் ரோட்டிலிருக்கும் ஹெவி காஸ்டிங் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் தொழிற் சங்கத்தில்சேர்ந்து சம்பள உயர்வு உட்பட ஏனைய கோரிக்கைகளை சமர்பித்தனர். இதன் பிறகு நிர்வாகத்தினர் மோல்டிங் பகுதியை மூடுவதாக அறிவித்துள்ளனர். இதை எதிர்த்து தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர். சாமான்கள் எடுத்துச் செல்வதைத் தடுத்ததாக கூறி 21 தொழிலாளர்களை கைது செய்து, வெஞ்சிறைக்குள் அடைத்துள்ளது தமிழக அரசு. இதன் மூலம் அரசு, முதலாளிக்கு ஆதரவாக போராட்டத்தை உடைக்க வழிவகுத்துக் கொடுக்கிறது.

#### ஒண்டிப்புதூர் மீனாக்ஷி இண்டஸ்ட்ரீஸ்

கோவை ஒண்டிப்புதூரிலிருக்கும் மீனாட்சி இண்டஸ்ட்ரீஸ் தொழிற்சாலையில் தொழிலாளர்கள் சம்பள உயர்வு கோரிக்கைவைத்து 17-6-76முதல் வேலை நிறுத்தப் போராட்டம் நடத்தி வருகிறார்கள். நிர்வாகத்தினர் கதவடைப்புச் செய்து பிடிவாதமாக இருந்து வருகிறார்கள். போராடி வரும் தொழிலாளர்களுக்கு ஆதரவாக கோவையிலுள்ள இஞ்சினியரிங் தொழிலாளர்கள் (சி ஐ டி யூ) ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடத்தி வருகிறார்கள்.

#### டி. பாலன் அறைகூவல்

மேலும், ஆதரவு இயக்கங்கள் தொடர்ந்து நடத்த வேண்டுமெனவும், கோவை மாவட்ட அனைத்து இஞ்சினியரிங் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு ஆதரவாக ''பொது வேலை நிறுத்தம்'' உட்பட செய்ய தயாராக வேண்டுமெனவும், அதற்காக, கோவை மாவட்ட இஞ்சினியரிங் அரங்கில் செயல்பட்டு வரும் அனைத்து சங்கங்களையும் ஒன்றுபட்டு— செயல்பட முன்வர—வேண்டுமென கேட்டுக் கொண்டும், கோவை ஜில்லா ஜெனரல் இஞ்சினியரிங் அண்ட் மெக்கானிக்கல் தொழிலாளர் சங்கம் (சி ஐ டி யூ) பொதுச்செயலாளர் டி பாலன் அறைகூவல் விடுத்துள்ளார்.

## ஜூலை 24ல் மின்குழு தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

### தமிழ்நாடு மின்குழு ஊழியர் சங்க முடிவுகள்

சிவகெங்கை ஜூலை. 21—

தமிழ்நாடு மின்குழு ஊழியர் சங்கத்தின் நிர்வாகக் குழுக்கூட்டம் ஜூலை 16ம் தேதி சிவகெங்கையில் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் எடுத்த முடிவுகளின்படி ஒவ்வொரு திட்ட தலைமை அலுவலகத்தின் முன்பும் ஜூலை 24ம் தேதி சக்திமிக்கதோர் ஆர்ப்பாட்டம் செய்து கோரிக்கை மனுக்களை அளிக்க முடிவு செய்யப்பட்டது.

#### உண்ணாவிரதம்

அடுத்தகட்டமாக ஆகஸ்ட் 7ம்தேதி ஒவ்வொரு கோட்ட— அலுவலகத்தின் முன்பும் ஒரு நாள் அடையாள உண்ணாவிரதம் (காலை 7 மணிமுதல் மாலை 7 மணி வரை) இருக்கவும் ஏகமனதாக முடிவு செய்யப்பட்டன.

தமிழ்நாடு மின்சார போர்டு தொழிலாளர்களின் சிறப்பு மாநாட்டை மதுரையில் நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

ஜூலை 24-ம் தேதிமத்திய அலுவலகங்களின் முன்பு நடைபெறவிருக்கும் ஆர்ப்பாட்டத்திற்கு ஒவ்வொரு பிரிவிலிருந்தும் 3 தோழர்களை அனுப்பிவைக்குமாறும் அதற்கான செலவுகளை அந்தந்தப்பிரிவுத் தோழர்களே பகிர்ந்துகொள்ள வேண்டும் எனவும் ஆகஸ்ட்மாதம் 7-ம் நாள் நடைபெறவிருக்கும் உண்ணாவிரதத்தில் கலந்து கொள்ளும் கூடுதலான தோழர்களின் பட்டியலை தயாரிக்கவும் முடிவு செய்யப்பட்டது.

#### மின்கதிர்

மின் தொழிலாளர்களின் போராயுதமான 'மின்கதிர்' பத்திரிக்கையின் ஆண்டுச் சந்தா ரூ 5 ஐ உடனடியாக டெபாசிட்செய்யவேண்டும். ஆகஸ்ட் 20-ம் தேதி நடைபெறவிருக்கும் சிறப்பு மாநாடு, மற்றும் சங்க கட்டிடத்திற்காக வளர்ச்சி நிதி வசூலை தீவிரப் படுத்த வேண்டுகோள் விடுவிக்கப் பட்டது, மற்றும் பலமுக்கி முடிவுகள்எடுக்கப்பட்டனய

## முதலாளியைப் பாதுகாக்க தி. மு. க. சங்கத்தின் துடிப்பு

கோவை ஜூலை. 20—

கோவை பாப்பநாயக்கன்பாளையத்தில் சித்திரா இஞ்சினியரிங் ஒர்க்ஸ் என்ற தொழிற்சாலையிருக்கிறது. அந்ததொழிற்சாலையில் தொழிலாளர்களுக்கு ஈ எஸ் ஐ போன்ற வசதிகள் செய்து கொடுத்திருந்தார்கள்.

ஆனால், ஓரிரு மாதங்களுக்கு முன்னால், மேற்படி தொழிற்சாலையில் இருந்த மெஷின் சாப் பகுதியை ராஜூ இஞ்சினீயரிங் ஒர்க்ஸ் என்று பெயர் வைத்து, ஏற்கனவே தொழிலாளர்களுக்கு இருந்துவந்த ஈ எஸ் ஐ உட்பட சகல வசதிகளையும் நிறுத்தி விட்டார்கள். இதை ஆட்சேபித்து தொழிலாளர்கள் தொழிற் சங்கத்தில் சேர்ந்து நடவடிக்கை எடுத்தார்கள்.

இதைக்கண்டு ஆத்திரமுற்ற நிர்வாகம் மோல்டிங் பிரிவு தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க மறுத்தது. இதைஆட்சேபித்து தொழிலாளர்கள் 21-ம்தேதிமுதல் வேலைநிறுத்தம் செய்து வருகிறார்கள்.

வேலை நிறுத்தம் தொடர்ந்து நடந்து வரவே திடீரென ஒரு நாள் தி மு க. கொடியை தொழிற்சாலைக்கு முன்னால்கொண்டு வந்து போடப்பட்டது. தி மு க. வை சார்ந்தவர்கள் என்று கூறப்படுகிற சில வெளியாட்கள் வேலை நிறுத்தம் செய்து வரும் தொழிலாளர்களை மிரட்டி வருகிறார்கள். மோல்டிங் சாப் மூடப்பட்டு விட்டதாகவும், மெஷின் சாப் மட்டும் ஓட்டுவதாகவும் கூறி வருகிறார்கள்.

மேற்படி விபரங்கள் குறித்து விசாரித்து வந்ததில் முதலாளி தி மு க— ஆதரவாளர் என்றும்தெரிய வருகிறது. மேலும், விசாரித்ததில் முதலாளிக்கு ஆதரவாக திமுக பிரமுகர்கருப்பசாமி தலைமையில் இருக்கும் சில திமுகவினர்தான் இந்த கருங்காலி வேலைகளில் ஈடுபட்டு வருவதாக தெரியவருகிறது.

இந்த நடவடிக்கையால் கோவை நகரத்திலும், சுற்றுப்புறங்களிலிருக்கும் இஞ்ஜினியரிங் தொழிலாளர்கள் மத்தியில் திமுகவினரின் வேஷம் அம்பலப்பட்டு வருகிறது.

## நடக்க இருப்பவை

**மதுரையில் மகளிர் மன்ற தொடக்க விழா**

23—7—72 ஞாயிறு மாலை 4 மணிக்கு

மேலமாசி வீதி கல்யாண மஹாலில் (சந்திரா டாக்கீஸ் அருகில்)

தோழியர் !

**மணியம்மாள்**

தலைமையில் நடைபெறும்

சிறப்புரை :

**பாப்பா உமாநாத்**

வாழ்த்துரை :

**ஏ. பாலசுப்ரமண்யம்**

மற்றும் பலர்

ஃ ஃ ஃ

**பொதுக் கூட்டம்**

அன்று மாலை 7 மணிக்கு சிம்மக்கல்லில்

**பாப்பா உமாநாத்**

மணியம்மாள், சீதாலெக்ஷிமி, ரோஸ்மேரி, பாப்பா பேசுவர்.

ஃ ஃ ஃ

**குமார் குழு இன்னிசை**

ஜூலை 24 மதுரை தாலுகா பாரப்பட்டி.

ஜூலை 25 முதல் ஆகஸ்டு 6 வரை ; தஞ்சை மாவட்டம்.

## ஆசிரியருக்கு...

### அரசாங்க உணவு இலாகா கவனத்தில் கொள்ளுமா?

உத்தமபாளையம் தாலுகா கோம்பை, பெல்டாரியாலொதுக்கப்பட்ட ஊர்களில்ஒன்று. தற்சமயம் ரேஷன் கடை மூலம் அரிசி சப்ளை செய்யப்படுகிறது.

கோம்பை கோவாபரேட்டிவ் ஸ்டோரிலும் ஒரு ரேஷன்கடை எடுத்துள்ளோம். ரேஷன் கடைக்கு ஒருமொத்தவியாபாரிமூலம் அரிசி வழங்கப்படுகிறது.

இவ்வாறுவழங்கும் அரிசி மட்டரக அரிசியாகும். ஒவ்வொரு வாரமும், நிர்ணய விலை இல்லாமல், அதிக விலையில் சப்ளை செய்கிறார்கள். இந்த மொத்த வியாபாரி, சர்க்கார் அதிகாரிகளை தன் கைக்குள் போட்டுக் கொண்டு, அதிக விலை நிர்ணயித்து ''விலைப்பட்டியல்'' வாங்கி, ரேஷன் கடைக்கு சப்ளை செய்கிறார்.

தேனி போன்ற மார்க்கெட்டுகளில், குவிண்டாலுக்கு சுமார் ரூ 10லிருந்து 20 ரூபாய் வரை குறைத்த விலையில் அரிசி வாங்கலாம், ஆனால், ரேஷன் கடைகளுக்கு, சர்க்கார், நிர்ணயித்த மொத்த வியாபாரி மூலம் தான் அரிசி வாங்கிக் கொள்ள வேண்டுமென, இருப்பதால், மொத்த வியாபாரி கொள்ளை லாபம் அடிக்க வழி ஏற்பட்டுள்ளது. இந்நிலையை போக்க பொது மக்களுக்கு குறைந்த- நியாய விலையில் நல்ல அரிசி சர்க்கார் மூலம் வினியோகிக்க ஆவன செய்யக் கோருகிறேன். மொத்த வியாபாரி லைசென்ஸை காலி செய்து, அரசாங்க கிடங்கு மூலம் அரிசி சப்ளை செய்யக் கோருகிறேன்.

இங்ஙனம்,
எம். வெங்கடசுப் மணியம்
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி,
கோம்பை.

## விவசாயிகளுக்கு கோயில் நிலம்

### விவசாய சங்கத்தின் சாதனை

நன்னிலம், ஜூலை 20—

நன்னிலம் தாலுகா திருக்கொட்டாரம் கிராமத்திலுள்ள ஐராவதி அம்மன் கோவிலுக்குச்சொந்தமான நிலம் விவசாயிகளின் உறுதியான போராட்டத்தினால் விவசாயிகளுக்கு பிரித்து வழங்கப் பட்டது.

இந்தக் கோவில் நிலம் பாண்டிச்சேரி முன்னாள் அமைச்சர் கே. எம். குருசாமியின் நிர்வாகத்தில் பரம்பரை டிரஸ்டி என்ற பெயரில்இருந்து வருகிறது.

இதுவரை அந்த நிலங்களை தனக்கு வேண்டியவர்களிடம் மொத்த குத்தகைக்கு கொடுத்து வந்தார். நிலமற்றவர்கள் கோவில் நிலத்தை சாகுபடிக்கு கேட்டால்கொடுக்க மறுத்து வந்தார். பலபினாமி குத்தகை சீட்டுகள் எழுதி வைத்துக்கொண்டு மொத்த குத்தகைதாரரிடம் நிலத்தை விட்டிருந்தார்.

அந்த நிலங்களை அவ்வூரில் இருக்கும் கூலி வேலை செய்பவர்களுக்கு சாகுபடிக்கு கொடுக்கா விட்டால், அந்த நிலங்களில் இறங்கி சாகுபடி செய்வதென்றும், நிலம் கிடைக்க இறுதிவரை போராடுவதென்றும் விவசாயிகள் சங்கம் முடிவு செய்தது.

சங்கத்தின் பலத்தையும் விவசாயிகளின் உறுதியையும் கண்ட நிலச்சுவான்தாரும், மொத்தக் குத்தகைதாரரும் இறங்கி வந்தனர். நிலத்தை விவசாயிகள் சங்கத்திடம் ஒப்படைப்பதாகவும் - நிலத்தை சங்கம் பிரித்துக் கொடுத்து குத்தகை சீட்டு வாங்கித் தருமாறும்கோரினார்கள்.

பின் மொத்தக் குத்தகைதாரர்களிடமிருந்து நிலத்தை எடுத்து அந்த நிலத்தில் உழுது வந்த 15 ஏழை விவசாயக் குடும்பங்களுக்கு தலா 2 ஏக்கர்வீதம் பிரித்துக் கொடுக்கப் பட்டது.

1969ம் ஆண்டில் நடைபெற்ற கூலி உயர்வுப் போராட்டத்தில் மிகக் கடுமையான அடக்குமுறைக்கு ஆளாக்கப் பட்டது இந்தக் கிராமம். 300 பேர்கள் சிறையில் அடைக்கப்பட்டாலும் இறுதி வரை உறுதியாகப் போராடி 6 லிட்டர் அறுவடைக் கூலி பெற்ற கிராமம் இந்தக் கிராமம் என்பது குறிப்பிடத்தக்கது.

## கோவை மாவட்ட குழுக் கூட்டம்

### சிறப்பான ஊர்வலம்

கோவை, ஜூலை. 20—

கோவை தாலுகா வடக்கு கமிட்டி ஏரியாவில் மணியகாரன்பாளையம் கிராமத்தில் கோவை மாவட்ட கமிட்டிக் கூட்டம் ஜூலை 14, 15, 16 ஆகிய மூன்று நாட்கள் நடைபெற்றது.

#### தெருமுனைக் கூட்டங்கள்

ஜூலை 14-ம் தேதி கமிட்டி கூட்டம் முடிந்ததும் இரவு 8-30 மணிக்கு இரண்டு தெருமுனை கூட்டங்கள் நடைபெற்றன. மணியகாரன்பாளையத்தில் ஹரிஜன தெரு தோழர்கள் கே எஸ், கருப்புசாமி, மாணிக்கமும் நல்லாம்பாளையத்தில் கே, கருணாகரன், ஆர் திருவேங்கடம் ஆகியோரும் பேசினார்கள்,

ஜூலை 15-ம் தேதி இரவு 9 மணிக்கு தெருமுனைக் கூட்டங்கள் நடந்தன. தோழர் கே. ஜி கருணாகரன் உருமாண்டம்பாளையம் புதூர் பிரிவிலும், நடராஜன் இரவணம்பட்டியிலும், ஆர். வெங்கிடு உடையாம் பாளையத்திலும், கே சிவசாமி - சின்ன வேடம்பட்டியிலும், கே எஸ் கருப்புசாமிபூசாரிபாளையத்திலும் பேசினர்.

#### சிறப்பான ஊர்வலம்

ஜூலை 16ம் தேதி மாலை 7 மணிக்கு ஊர்வலம் வாத்தியக் கச்சேரிகளுடனும், வேடங்கள் போட்ட சதங்கை ஆட்டங்களுடன் விவசாயத் தொழிலாளர்களும் பெண் தொழிலாளர் 200க்கும் மேற்பட்டவர்களும் ஆண்களும், சிறுவர்களும் மாக 1000 பேர் கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலம் உடையாம்பாளையத்திலிருந்து புறப்பட்டது

தோழர்கள் ஆர்வெங்கிடு, பி நடராஜன் தலைமையில், அகில இந்திய விவசாயிகள் சங்கம் வாழ்க! விவசாயத் தொழிலாளர்களுக்கு தினக் கூலி ரூ. 5 வேண்டும்! மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க! செங்கொடிக்கு— ஜே! என்று விண்ணதிர உணர்ச்சிமிக்க கோஷங்கள் எழுப்பி வந்தனர். இவைகளுக்கு முத்தாய்ப்பு வைத்தாற்போல் இடையிடையே வாணவெடிகள் வானத்தில் சென்று இடிமுழக்கமிட்டு வெடித்தன.

#### வானத்தில் அரிவாள்-சுத்தியல்

அந்த வெடி சப்தத்தையொட்டி வானத்தில்பூமாரி பொழிவதுபோல் வண்ண வண்ணப் பூக்களால் அரிவாள் சுத்தியல் வானத்தில் தோன்றியது மிகவும் அற்புதமாக இருந்தது.

இவ்வாறு புறப்பட்ட உணர்ச்சி மிக்க ஊர்வலம் உடையாம்பாளையம், சுப்பா நாயக்கன்புதூர், பூசாரி பாளையம் வழியாக சென்று மணியகாரன்பாளையம் பஸ் ஸ்டாண்ட் திடலை அடைந்தது.

#### பொதுக் கூட்டம்

அங்குமின்வண்ணவிளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட மேடையில் ஒருதொழிலாளியால் வரையப்பட்ட எழில்மிக்க ஓவியமான 9 அடி அகலம் 6 அடி உயரத்தில் மாமேதை கார்ல் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் மேடையை அலங்கரிக்க— அருகில் 100க்கு மேற்பட்ட சிவப்பு விளக்குகளாலேயே ஜொலித்துக் கொண்டிருக்கும் நட்சத்திரமும், கூட்டத்தினரின் பார்வையைக் கவர்ந்தது.

தோழர் கே. ரமணி விவசாயத் தொழிலாளர் சங்கத்தை திறந்து வைத்தார். பின் அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு எம் ஆர் நாராயணசாமி தலைமை வகித்தார். தோழர்கள் கே. ரமணி, ஆர் வெங்கிடு கே எஸ் கருப்புசாமி ஆகியோர் உரையாற்றினர். ஆயிரக் கணக்கான மக்கள் கலந்து கொண்டனர்.

## சிறை மீண்ட ஆசிரியர்களுக்கு பாராட்டு

வாலாசாபாத், ஜூலை. 16—

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி செங்கற்பட்டு மாவட்டக் கிளையின் சார்பில் செங்கற்பட்டு மாவட்டத்தில்சிறை சென்ற ஒரு பெண் உட்பட 99 ஆசிரியர்களுக்கும் வாலாசாபாத் ராஜா திரையரங்கில் பாராட்டு விழா நடைபெற்றது.

விழாவிற்கு ஆசிரியர் கூட்டணி நிறுவனர் திரு. இராமுண்ணி, மாநிலத்தலைவர் திரு. சி. கிருஷ்ணன், மாநில பொதுச்செயலாளர் திரு செ. முத்துசாமி எம். எல். சி, மாநிலப் பொருளாளர் திரு. கோ. அப்புகுட்டி மற்றும் பல ஆசிரியர்கள்களும் போராட்டத்தை தலைமையேற்று சிறியமுறையில் வழிநடத்திய மாநில போராட்டக்குழுக் தலைவர் திரு. பெ கந்தசாமி, திருமதி இராமுண்ணி, மாநிலஇணைச் செயலாளர் திரு. பி. ஆதாம் செங்கை மாவட்ட செயலாளர் திரு பி மணி அய்யர், அமெரிக்கன்கல்லூரி பேராசிரியர் டாக்டர் சண்முகசுந்தரம் ஆகியோரும் பேசினர்.

விழாவிற்கு மாவட்ட துணைத்தலைவர் திரு ஜே. வேணுகோபாலன் தலைமை தாங்கினார். விழாக்குழுத் தலைவர் திரு மா. ச. முனுசாமி அனைவரையும் வரவேற்றார். மாவட்ட துணைச் செயலாளர் திரு. சு. ஆறுமுகம் நன்றி கூறினார்.

விழாவின் துவக்கத்தில் வாலாசாபாத் பஸ் நிலையத்திலிருந்து வாலாசாபாத் கிளைத் தலைவர் திரு டி. அச்சுதன் தலைமையில் ஆசிரியர்கள் ஊர்வலம் புறப்பட்டது. ஆயிரத்திற்கும் அதிகமான ஆசிரியர்கள் ஊர்வலத்தில் பங்கேற்றனர்.

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின்

# மதுரை மாநாடு

[ 5 ]

**வலதுசாரி திருத்தல்வாதத்தையும் இடதுசாரி சந்தர்ப்ப வாதத்தையும் ஒரேசமயத்தில் எதிர்த்துப் போராட வேண்டும். இல்லையேல், புரட்சிகரஇயக்கத்துக்குஆபத்து**



இ. எம். எஸ். நம்பூதிரிபாட்

எழுதும்

தொடர் கட்டுரை

தமிழாக்கம்: முரளி

## அதிக ஆபத்தானது எது ?

கம்யூனிஸ்ட் கட்சி புனரமைக்கப்பட்டு புதிய கட்சித் திட்டமும் நிறைவேற்றப்பட்டது. இந்தக் காலத்தில் (1964—65) பிரதான அபாயம் திருத்தல்வாதமே என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்தது.

ஆனால் சூழ்நிலைகளின் மாறுதலுக்கேற்றவாறு கொள்கைப் போராட்டம் நடத்தவேண்டியது ஏற்படும் என்றும் முக்கிய ஆபத்து என்பதும் மாறிக்கொண்டே வருமென்பதும் மார்க்சிஸம்—லெனினிசம் கூறும் படிப்பினை. வலது சந்தர்ப்பவாதமா அல்லது இடது சந்தர்ப்பவாதமா எது கூடுதல் ஆபத்தானது என்ற கேள்விக்கு ஸ்டாலின் அளித்த பதில் என்ன?

"எதை எதிர்த்துப் போராடாமல் நீங்கள் விட்டுவிடுகிறீர்களோ, அது அதிக ஆபத்தாக மாறும்"

ஆகவே முக்கிய ஆபத்தான திருத்தல்வாதத்தை எதிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போராடும் போதே இடதுசாரி அதிதீவிரப் போக்குகளுக்கெதிரான போராட்டத்தையும் கட்சி நடத்தியது.

## கட்சியின் உஷார்த்தன்மை

திருத்தல்வாதக் கொள்கைகளுக்கு அடிபணிந்து பூர்ஷ்வா— நாடாளுமன்ற சந்தர்ப்பவாதக் கொள்கையைப் பின்பற்றிய டாங்கே கோஷ்டியை எதிர்த்ததே, அன்றைக்கு கட்சியின் முக்கிய போராட்டமாக இருந்தது. ஆனால் திருத்தல்வாதத்திற்கெதிரான போராட்டத்தைத் தவறாகப் புரிந்துகொண்டு தேர்தல்களையும் நாடாளுமன்ற நடவடிக்கைகளையும் நிராகரிப்பதுடன் இடதுசாரி அதிதீவிரப் பாதைக்குக் கட்சி போய்விடாமல் உஷாராக இருந்தது. முன்பகுதிகளில் சுட்டிக்காட்டியதைப் போல திருத்தல் வாதிகளிடமிருந்து வெளியேறி, மார்க்சிச—லெனினிசக் கொள்கையின் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட கட்சித்திட்டம் 7-வது கட்சி மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது. அதே 7-வது மாநாட்டிலேயே கட்சித் திட்டத்தின் மூலமாகவும், கேரள தேர்தல் சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட தனித் தீர்மானம் மூலமாகவும் நாடாளுமன்ற அரங்கில் செய்ய வேண்டிய வேலையின் முக்கியத்துவம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

கட்சி மாநாடு முடிந்த பிறகு, இந்திய அரசியலில் ஏற்பட்ட ஒவ்வொரு மாற்றங்களைப் பற்றியும் கட்சி பரிசிலனை செய்தது. கொள்கைத் திட்டங்கள் வகுக்கப்பட்ட காலங்களில் திருத்தல் வாதமும் முக்கிய ஆபத்தாக இருந்ததைப் போலவே இடதுசாரி சந்தர்ப்பவாதத்தை எதிர்த்தும் கட்சித்தலைமை போராடியது.

1965-ஆவது வருடம் நடைபெற்ற இந்திய-பாகிஸ்தான் யுத்தம், அதில் மக்கள் சீனத்தின் பங்கு, அதோடு தொடர்புள்ள காஷ்மீர் பிரச்சினை, இந்தப் பிரச்சினை சம்மந்தமாக வலது—இடது ஆகிய இரண்டு விதமான கருத்துக்கள் கட்சியில் முன்வந்தன. அந்த இரண்டு கருத்துக்களுக்கும் எதிராகப் போராடிக் கொண்டே அன்றைக்கு கட்சி தன் பணிகளை ஆற்றி வந்தது.

## சோவியத்-சீனக் கட்சிகள் எதிர்ப்பு

சில மாதங்களுக்குப்பிறகு சிறையிலிருந்து மத்திய கமிட்டி உறுப்பினர்கள் விடுதலையானார்கள். மத்திய கமிட்டி கூட்டமும் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் பெரும்பான்மையான உறுப்பினர்கள் பங்கு கொண்டார்கள். மேலே கூறப்பட்ட பிரச்சினைகளில் கட்சி மேற்கொண்ட நிலை சரியானதென்று இந்தக் கூட்டம் முடிவு செய்தது. தொழிற்சங்க—விவசாய சங்க அரங்கில், கட்சி பின்பற்ற வேண்டிய, அணுகு முறைகளைப் பற்றிய தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. 4-வது பொதுத்தேர்தலில் பங்கெடுப்பது சம்பந்தமான தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. இவை அனைத்திலும் இரண்டுவிதமான திரிபுகளையும் எதிர்க்கும் உண்மையான மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் பார்வை இழையோடியதைக் காணலாம்.

இத்தகைய இரண்டுவிதமான திரிபுகளையும் எதிர்த்து போராடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி நேரடியாகவே எதிர்த்தது. சீன கம்யூனிஸ்ட் கட்சி மறைமுகமாக எதிர்த்தது. இந்திய ஆளும் வர்க்கங்களைப் பற்றியும் அரசைப் பற்றியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 7-வது மாநாடு நிறைவேற்றிய திட்டத்தை சீனக் கம்யூனிஸ்ட் கட்சி ஏற்கவில்லை.

## சீனக் கட்சியின் நிலை புறக்கணிப்பு

"நேருவின் தத்துவம்" என்ற தலைப்பில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்ட கட்டுரைகளிலும் மற்றும் கூறப்பட்டிருந்த கருத்துக்களிலும் அதிதீவிர இடதுசாரி தன்மை இருந்தது என்று அன்றைக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கருதியது. இன்றைக்கும் கட்சியின் கருத்து அதுவேதான்.

இந்திய ஆளும் வர்க்கத்திற்கும் ஏகாதிபத்தியத்திற்கும் இடையில் எவ்வித முரண்பாடும் இல்லை இந்தியாவை ஆளுவது ஏகாதிபத்தியத்திடம் பூரணமாக சரணடைந்த ஒரு பூர்ஷ்வா வர்க்கமே என்ற சீன கம்யூனிஸ்ட் கட்சியின் கணிப்பை கட்சி ஏற்றுக் கொள்ளவில்லை. தனது வர்க்கத்தின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக ஒரு சில சந்தர்ப்பங்களில் சில பிரச்சினைகளில் ஏகாதிபத்தியத்தோடு இந்திய முதலாளி வர்க்கம் மோதவேண்டிய நிலை ஏற்படலாமென்றும் அத்தகைய சந்தர்ப்பங்களில் ஆளும் வர்க்கத்திற்கு ஒத்துழைப்பு கொடுப்பதற்கு முன் வர வேண்டுமென்றும் ஏழாவது கட்சி மாநாடு அங்கீகரித்த கட்சித்திட்டத்தில் (10-வது பாரா) தெளிவுபடுத்தியுள்ளது.

## மார்க்சிஸ்ட்கட்சியின் நிலையேசரியானது

கட்சியின் இந்த முடிவானது முற்றிலும் சரியானது என்பது நிரூபிக்கப்பட்டது. இதற்குச் சிறந்த உதாரணங்களே பங்களாதேஷ் சம்பவங்களும், அதைத் தொடர்ந்து நடைபெற்ற இந்திய—பாகிஸ்தான் யுத்தமும். ஆனால் ஏகாதிபத்தியத்துடன் இந்திய ஆளும் வர்க்கங்களுக்கு ஏற்படும் மோதல் தற்காலிகமானதேயாகும்; அவர்களுக்கு கிடைக்கும் முதல் சந்தர்ப்பத்திலேயே மீண்டும் ஒன்றுசேர அவர்கள் முயற்சிப்பார்கள், என்று கட்சித் திட்டத்தில் கூறப்பட்டிருப்பது சரியானது என்பதையும் நிரூபிக்கக்கூடிய நிகழ்ச்சிகள் சமீபத்தில் நடந்துள்ளன.

நம் ஆளும் வர்க்கங்கள் ஏகாதிபத்தியத்தோடு மோதக்கூடிய அதே நேரத்தில் உள் நாட்டில் புரட்சிகர வெகுஜன ஸ்தாபனங்களையும் தொழிலாளி வர்க்கக்கட்சிகளையும் முதல்எதிரியாகக்கருதி அவைகளை ஒழிப்பதற்கான நடவடிக்கைகளிலும் முதலாளி வர்க்கம் ஈடுபட எவ்விதத் தயக்கமும் காட்டாது. இதற்குச் சிறந்த உதாரணமே மேற்கு வங்காள நிகழ்ச்சிகள்.

## ஏகாதிபத்திய எதிர்ப்பு நிலைக்கு ஆதரவு

ஆகவே இந்த உண்மைகளைப் புரிந்து கொண்டு, இதற்கேற்றவாறு ஆளும் வர்க்கத்துடனான போராட்டத்தில் எவ்விதமான தயக்கமும் காட்டாமலேயே ஏகாதிபத்தியத்திற்கெதிராக ஆளும் வர்க்கம் சிறு நடவடிக்கை எடுத்தாலும் அதை ஆதரிப்பது தொழிலாளிவர்க்கத்தின் கடமையென்று கட்சி கருதுகிறது.

இத்தகைய மார்க்சிஸ்ட் கொள்கையை அங்கீகரித்த நமது கட்சியின் நிலையை ஆரம்பம் முதற்கொண்டே சீனக்கட்சி விரும்பவில்லை ஆனால், இதை அன்றைக்கு அவர்கள் பகிரங்கமாகக் கூறவில்லை.

## நக்சல்பாரி இயக்கம்

1967-ம் ஆண்டில் மேற்கு வங்கத்திலுள்ள நக்சல்பாரி என்ற கிராமத்தைச் சுற்றிலுமுள்ள பகுதிகளில் விவசாயிகள் போராட்டம் நடந்தது. இந்தப் போராட்டமானது, இந்தியா முழுவதுமே ஆயுதமேந்திப் போராடுவதற்கான முன்னோடிப் போராட்டமாகும் என்று கட்சிக்குள்ளேயே உள்ள சில தோழர்கள் கருதினார்கள். இந்தத்தோழர்கள் கட்சியின் கொள்கையை எதிர்த்து—கட்சியின் தலைமைக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினார்கள். அந்தச்சமயத்தில் தான், சீனக்கட்சியானது தனது கருத்தை பகிரங்கமாக வெளியிட்டதுடன் இவர்களுக்கு சீனக்கட்சி, எல்லாவிதமான ஆதரவும் அளித்தது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையை நவீன திருத்தல்வாதிகள் என்று பட்டம் சூட்டியது.

## சீனக்கட்சியின் தவறான கணிப்பு

எந்தவொரு வெகுஜன ஸ்தாபனங்களோடும் தொடர்பு கொள்ளாமல்-தனித்தனி தாக்குதல்களில் ஈடுபடக்கூடிய நக்சலைட் தாக்குதல்களையும் கொலைகளையும், "நாடுதழுவிய புரட்சிகரமான போராட்டம்"— என்று புகழ்பாடி பிரச்சாரம் செய்தது.

இதே நக்சலைட்டுகள் தான் தங்களுடைய முதல் எதிரி, மார்க்சிஸ்டு கம்யூனிஸ்ட் கட்சிதான் என்று கூறினார்கள். கட்சித்தலைவர்களையும் ஊழியர்களையும் கொலை செய்வதற்கு போலீசுடனும் மற்றும் பல கட்சிகளுடனும் ஒத்துழைத்தார்கள்.

இப்படிப்பட்ட கொடுஞ் செயல்களைப் பற்றி சீனக் கட்சி என்ன கூறியது தெரியுமா? நக்சல்பாரிகளின் நடவடிக்கைகளானது வீரதீரமிக்க புரட்சிகரமான நடவடிக்கைகள் என்று புகழ்ந்து வாழ்த்தியது.

## ஒரே சமயத்தில் இரு போக்குகளையும் எதிர்த்துப் போராட்டம்

சுருக்கமாகக் கூறுமிடத்து, ஓர் புறம், சோவியத் திருத்தல்வாதக் கொள்கையை எதிர்த்துப் போராடும் போதே, மறுபுறம், சீனத்தின் இடதுசாரி அதிதீவிர வாதப்போக்கையும் எதிர்த்துப் போராடவேண்டிய நிலை ஏற்பட்டது.

அதாவது. இரண்டு ஆபத்துக்களையும் ஒரே சமயத் எதிர்த்துப் போராடவேண்டிய நிலை கட்சிக்கு ஏற்பட்டது.

இத்தகைய சூழ்நிலையை வளரவிட முடியுமா? ஆகவே கட்சிக்குள்ளேயே உள்ள அதிதீவிரப் போக்குகளுக்கும், அதற்கு ஆதரவு கொடுக்கும் சீனக் கட்சியின் போக்குகளுக்கும் எதிராக, பகிரங்கமான போராட்டம் நடத்தவேண்டிய கட்டாய நிலை கட்சிக்கு ஏற்பட்டது.

1967 ஆகஸ்டு மாதம் மதுரையில் நடைபெற்ற மத்தியக் கமிட்டிக் கூட்டம் இந்தப் போராட்டத்தைத் துவக்கி வைத்தது உலக கம்யூனிஸ்ட் இயக்கத்திலுள்ள விவாதத்திற்கு உரிய ஒவ்வொரு பிரச்னைகளைப் பற்றியும் கட்சியின் நிலையைத் தெளிவுபடுத்தக் கூடிய நகல் தீர்மானத்தை நிறைவேற்றியது. அதற்கு, "சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையேயுள்ள கருத்து வேறுபாடுகள்" என்ற தலைப்பும் கொடுக்கப்பட்டது. அதன் அடிப்படையில் விரிவான உள்கட்சி விவாதமும் நடைபெற்றது. அதற்கு உதவிபுரியக்கூடிய கட்டுரைகளையும், "ஆந்திரத் தோழர்களுக்குக் கடிதம்" போன்ற பிரசுரங்களையும் கட்சித்தலைமை வெளியிட்டது.

## எதிரிகளின் கனவு என்னவாயிற்று?

இடதுசாரி சந்தர்ப்பவாதத்தை எதிர்த்து நடத்தும் இந்தப் போராட்டம், கட்சியைச் சிதறடித்து விடும் என்று எதிரிகள் கனவு கண்டார்கள்.

அன்றைய மத்தியக்கமிட்டி உறுப்பினர்களில் நான்கு பேர்களும். காஷ்மீர், உத்திரப்பிரதேஷ் ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் பெரும்பாலான உறுப்பினர்களும், ஏனைய எல்லா மாநிலங்களிலும் ஒரு சில உறுப்பினர்களும் "மாவோவின் சிந்தனை வழி நடப்போம்"— என்று கூறி கட்சியிலிருந்து வெளியேறிவிட்டார்கள். பிறகு இவர்கள் நக்சலைட் குழுக்களை அமைத்தார்கள்.

எர்ணாகுளத்தில் நடந்த கேரள மாநிலக் கட்சியின் விரிவு படுத்தப்பட்ட கூட்டத்தில் (பிளீனத்தில்) ஒரு கடுமையான கொள்கைப் போராட்டமே நடந்தது. தோல்வியடைந்த "நக்சலைட்" ஆதரவாளர்கள், சிறிது நாட்களுக்குப் பின்னர் தனியாகவே செயல்படலாயினர்.

நாடு முழுவதிலும் இது குறித்து உள்கட்சிப் போராட்டத்தின் இறுதிவடிவமாக, 1968-ல் பர்துவான் நகரில் அகில இந்திய பிளீனக் கூட்டம் நடந்தது. அங்கு விவாதம் கடுமையாக நடந்தது விவாதத்தில் 'நக்சலைட்' பகுதியினர் தோல்வி அடைந்தனர்.

முக்கிய ஆபத்தான திருத்தல்வாதத்தை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கும் போதே, இடதுசாரி சந்தர்ப்பவாதத்திற்கு எதிராகவும் போராட வேண்டும் என்ற அடிப்படைக் கொள்கையைக் கட்சி அங்கீகரித்தது. மார்க்சிஸ்ட்— லெனினிஸ்டு பார்வையோடு, இந்தியாவின் நிலைமைகளைக் கவனமாகப் பரிசீலனை செய்து, இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகரக் கொள்கைகளை அங்கீகரிப்பதற்கு மாறாக, "மாவோ சிந்தனையின்" அடிப்படையில் புரட்சி நடத்துவது என்ற போக்கை அகில இந்திய பிளீனக் கூட்டம் நிராகரித்து விட்டது.

சில மாதங்களுக்குப் பிறகு கட்சியின் 8-வது மாநாடு நடைபெற்றது. அதில் திருத்தல்வாதத்தையும் இடதுசாரி சந்தர்ப்ப வாதத்தையும் எதிர்த்து நடத்தப்பட்ட போராட்டத்தைக் குறித்து பரிசீலனை செய்து முடிவுகள் எடுக்கப்பட்டன.

அதற்குப் பிறகு உலக அரசியலிலும், இந்திய அரசியல் அரங்கிலும எத்தனையோ முக்கிய நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. அவைகளைப் பற்றியும் பரிசீலனை செய்யப்பட்டது. இன்றைய முக்கியமான அரசியல் போக்குகளைத் தெளிவுபடுத்தக்கூடிய ஒரு அரசியல் அறிக்கையையும், நகல் அரசியல் தீர்மானத்தையும் மதுரை மாநாட்டில் மத்தியக் கமிட்டி சமர்ப்பித்தது அதற்கு மாறுபட்ட இடதுசாரி தோற்றமுள்ள முக்கியமான விமர்சனங்கள் சில பிரதிநிதிகளிடமிருந்து வந்தன. இந்த விமர்சனங்களைப் பற்றி மத்தியக் கமிட்டியின் கருத்துக்களைத் தொகுத்து, தோழர் பி டி ரணதிவே கூறினார். அதன்பிறகு, பி டி ஆரின் பதிலை அங்கீகரித்தது

## கம்யூனிஸ்ட் இயக்கத்துக்கு ஆபத்து

சோவியத் தலைமையின் திருத்தல்வாதமானது உலக கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கு பெரும் ஆபத்தாகும் என்று, நமது கட்சியின் 7-வது மாநாடு முதல், தொடர்ந்து, சுட்டிக்காட்டி வந்துள்ளது. அந்த ஆபத்து இன்னும் நீடித்துக்கொண்டிருக்கிறது.

இந்தியாவில் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கொள்கை ரீதியாகவும், நடைமுறையில் வழிகாட்டி வருவதும் ஆன சகல உதவிகளையும் செய்து வருவது சோவியத் கட்சியேயாகும் இந்தத் திருத்தல்வாத ஆபத்தை எதிர்த்து சிறிதளவு கூட விட்டுக் கொடுக்காமல் போராடவேண்டும்.

ஆனால், இந்த ஆபத்தை எதிர்த்துப் போராடும் அதே சமயத்தில், சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் வழியையையும் எதிர்த்து சிறிதளவுகூட விட்டுக்கொடுக்காமல் போராடவேண்டும். ஏனென்றால், இந்திய அரசியலில் திருத்தல்வாதத்தை எதிர்ப்பதின் பேரால், சீறு காட்டக்கூடிய இடதுசாரி அதிதீவிரப்போக்கைப் பின்பற்றுவதானது, புரட்சிகர இயக்கத்தில் பேராபத்துகளை உண்டாக்கும். அதனால்தான் இதையும் கடுமையாக மத்தியக் கமிட்டி எதிர்த்தது. அதன் கருத்தை மாநாடும் அங்கீகரித்தது.

9-வது மாநாடு நடைபெறுவதற்கு முன்னால் நடந்த உள்கட்சி விவாதங்களிலும் சரி, மாநாட்டு விவாதங்களிலும்சரி, திருத்தல்வாதக்கருத்துக்கள் அதிகமாக வரவில்லை. குறைவாகத்தான் வந்தது.

அதற்குமாறாக, இடதுசாரித் தன்மையிலான போக்குகள் ஏராளமாகவே இருந்தன. இந்த நிலையில், இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட ஸ்டாலின் கருத்துப்படி, "இடதுசாரி சந்தர்ப்பவாதத்தை எதிர்த்து இன்று போராடாமல் விட்டுவிட்டால், எதிர்காலத்தில் அது முக்கிய ஆபத்தாக மாறும்.

(வளரும்)

---

## லெனின் வாழ்க்கை பற்றியபரதநாட்டியம்

சென்னை, ஜூலை. 19— லெனின் வாழ்க்கை பற்றிய பரத நாட்டியத்தை, பிருகா, பிருந்தா என்ற இரு சகோதரிகள், 1972 ஜூலை 17-இல் சென்னை சோவியத் கலாசாரமாளிகையில் மிகத் திறமையுடன் ஆடினர்.

இந்திய சுதந்திரத்தின் வெள்ளிவிழா, சோவியத் ஒன்றியம் நிறுவப்பட்டதன் 50ஆம் ஆண்டுவிழா ஆகியவை நிகழவிருக்கும் இவ்வாண்டில், லெனின் வாழ்க்கை பற்றிய இந்தப் பரத நாட்டியம் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

லெனின் வாழ்வின் மிக முக்கிய சம்பவங்கள் கவிதைகளாக எழுதப்பெற்று பரத நாட்டிய நிகழ்ச்சிகளாகச் சுமார் ஒருமணிநேரம்நடைபெற்றது மனிதகுல வரலாற்றின் போக்கை மாற்றிய மாபெரும் தலைவர் லெனினது வாழ்க்கை, கவிதையிலும் நாட்டியத்திலும் சித்தரிக்கத் தகுந்ததாகும், லெனின் என்ற மாமனிதனின் வாழ்க்கையை, பிருகாவும் பிருந்தாவும் தமது உணர்ச்சிகரமான முகபாவங்கள் மூலமாகவும், அங்க அசைவுகள் மூலமாகவும், திறம்படச் சித்தரித்தனர். அநீதிக்கு எதிரான லெனினது சீற்றத்தையும், ஏழை மக்கள் பால் அவரது கருணையையும் அவர்கள் அபிநயத்தில் வெற்றிகரமாகப் பிரதிபலித்தனர்,

இந்நிகழ்ச்சிக்கான தமிழ் கவிதைகளை திரு. ஆர். அய்யாசாமி இயற்றியுள்ளார். இப்படிப்பட்ட கருப்பொருள்களைக் கையாளுவதில் அவர் வல்லவர். எல்லோருக்கும் புரியக் கூடிய எளிய நடையில் அவரது கவிதைகள் அமைந்திருந்தன.

திரு அய்யாசாமியின் கவிதைகளுக்குச் சிறந்த முறையில் மெட்டுக்கள் அமைக்கப்பட்டிருந்தன. பிரபல ரேடியோ பாடகியான ஜெயஸ்ரீயின் இன்னிசை நாட்டிய நிகழ்ச்சிக்கு மிகப் பொருத்தமாக இருந்தது. லெனினது வாழ்க்கை பற்றிய கவிதைகளைப் பரத நாட்டிய வடிவத்தில் சித்திரிப்பது எளிதல்ல; இந்தப் பணியை நடன ஆசிரியர் சிதம்பரம் பி எஸ் குஞ்சிதபாதம் பிள்ளை மிகவெற்றிகரமாகச் செய்துள்ளார். இந்தப் புதுமையான முயற்சியின் மூலம் பரதநாட்டியக் கலைக்கு அவர் புத்தொளியூட்டி உள்ளார் என்றுகூறலாம்.

---

## அமெரிக்க மாலுமிகள் வியட்நாமில் போராட மறுப்பு

நியூயார்க், ஜூலை 17— அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்புப் போருக்கு எதிராக அமெரிக்கக் கப்பல் மாலுமிகள் கண்டனம் எழுப்பியுள்ளனர். வியட்நாமில்போராட மறுத்து கப்பலை விட்டு கீழே இறங்கினர்.

"ஆர்ஸ்கனி" என்ற விமானந் தாங்கிக் கப்பலை சேர்ந்த அந்த மாலுமிகள் கலிபோர்னியாவில் உள்ள அலமேடா என்னும் இடத்தில் செய்தியாளர் மாநாடு ஒன்றை நடத்தினர். தாங்கள் வியத்நாம் போரில் பங்கெடுக்க மறுப்பதாக அம்மாநாட்டில் அவர்கள் அறிவித்தனர்.

### படுகொலைக்கு உடன்படோம்

அந்த விமானம் தாங்கிக் கப்பல் இந்தோ — சீனவுக்குப் புறப்படு முன்னர் கப்பலை விட்டு வெளியேறிய பத்து மாலுமிகளில் ஒருவரான ஆர். ஸ்மித், "இந்தோ-சீனவில் நடைபெறும் படுகொலைகளில் நான் பங்குகொள்ள விரும்பவில்லை" என்று கூறினார்.

இந்த மாநாட்டில் கலந்துகொண்டு பேசிய, அமெரிக்கக் காங்கிரஸ் (சமஷ்டி சட்டசபை) உறுப்பினரான ஆர் கெல்மாஸ், வியத்நாம் போரில் பங்கெடுக்க மறுக்கும் அமெரிக்க மாலுமிகளை ஆதரித்தார். அந்த மாலுமிகளை இராணுவ நீதிமன்றத்தில் தண்டிக்க விரும்பும் அதிகாரிகளின் போக்கையும் அவர் கண்டித்தார்.

---

## போலீஸ் லாக்-அப்பில் ஒருவர் சாவு?

வேலூர், ஜூலை 21—

தெள்ளார் போலீஸ் ஸ்டேஷனுக்கு, விசாரணைக்காக அழைத்துச் செல்லப்பட்ட ஒரு நபர் போலீஸ் லாக்அப்பில் இறந்துபோனதாக ஒரு தகவல் கூறுகிறது.

லாக்அப்பில் இறந்ததாகக் கூறப்படும் நபரான கடம்பை கிருஷ்ணனை, கடந்த 17ந்தேதி போலீசார் 406 அல்லது 457 கீழுள்ள குற்றத்திற்காக ஸ்டேசனுக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகவும் பின்னர் அவர் அங்கு இறந்து போனதாகவும் கூறப்படுகிறது.

இந்தச் செய்தி பரவியவுடன் அன்று மாலை ஸ்டேஷனுக்கு முன்னால் பெரும் கூட்டம் கூடியதாகவும், அதையொட்டி குழப்பம் நிலவியதாகவும் சொல்லப்படுகிறது.

தகவலறிந்து ஸ்தலத்திற்கு விரைந்த வடார்காடு மாவட்ட போலீஸ் அதிகாரி (எஸ்பி) சம்பந்தப்பட்ட சப்-இன்ஸ்பெக்டரையும், ஒரு தலைமைப் போலீஸ்காரரையும்(ஏட்டு) சஸ்பெண்ட் செய்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

செய்யாறு ரெவின்யூ டிவிசனல் அதிகாரி பிரேதவிசாரணை நடத்தினாராம்.

---

## சிம்சன் தொழிலாளர் மீது அடக்குமுறைக்கு கண்டனம்

செங்கோட்டை, ஜூலை. 20— செங்கோட்டைஇந்தியகம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்) சார்பாக 19-7-72 அன்று சிம்சன் கம்பெனி நிர்வாகிக்கும் மூதன் மந்திரிக்கும் தந்தி ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது. அதில் மூடிக் கிடக்கும் சிம்சன் தொழிற்சாலைகளை உடனடியாகத் திறந்து தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

தி. மு. க. வும் குண்டர் படையும் சிம்சன் தொழிலாளர்கள்மேல் ஏவிவிட்டிருக்கும் அடக்குமுறையைக் கண்டித்தும் நகரில் பல பகுதிகளிலும் தட்டிப் போர்டுகள் எழுதி வைக்கப்பட்டுள்ளன

# கண்ணோட்டம்

## நீதி விசாரணைக்கு கோவிந்தா!

ஜூலை 5-ம் நாள் அர்த்தாலின் போது, பெத்த நாயக்கன் பாளையத்திலே துப்பாக்கிச் சூடு நடந்தது. அங்கே 9 பேர் மாண்டார்கள்...... அய்யம்பாளையத்திலே துப்பாக்கிச்சூடு நடந்தது. அங்கே 2பேர் இறந்தார்கள்... மாணமதுரை, குலக்கரை, சாத்தூர், கோவில்பட்டி ஆகிய ஊர்களில் நடந்த துப்பாக்கிச் சூடுகளின் ஊருக்கு ஒருவர் கொல்லப்பட்டார்கள்......

இதுதவிர, போலீஸ் தடியடியால், விருதுநகரை யடுத்த பாலவநத்தத்தில்ஒருவர் உயிரிழந்தார்...நெல்லை மாவட்டம் விளாத்திகுளத்தில் கத்திக்குத்துக்கு ஒருவர் பலியானர்......

மற்றும், கோவை சிறையில் இருவரும், திருச்சி சிறையில் ஒருவரும் மரணம் அடைந்தார்கள்...

இவ்வாறு 20 பேர் மாண்டார்கள் என்று வலது கம்யூனிஸ்ட் கட்சி தரப்பில் கூறப்படுகிறது. சிண்டிகேட் காங்கிரஸ் நவசக்தி ஏடு, இறந்தவர் எண்ணிக்கை 40-க்கு மேற்பட்டதாகும் என்கிறது இண்டிகேட் காங்கிரஸ் தலைவர் சங்கரதயாள்சர்மா 48 பேர் வரை கொல்லப்பட்டுள்ளார்கள் என்ற தகவலை வெளியிட்டிருக்கிறார். முதலமைச்சர் கருணாநிதியோ, துப்பாக்கிச் சூட்டில் மாண்டவர்கள் 15 பேர்கள் தான் என்று கூறுகிறார்.

வலது கம்யூனிஸ்ட் தலைவர் கல்யாணசுந்தரம், மத்திய மந்திரிகளான மோகன் குமாரமங்கலத்தையும், சி சுப்ரமணியத்தையும் சந்தித்து விவசாயிகள் போராட்டம் சம்பந்தமாகவும் துப்பாக்கிச் சூடுகள் பற்றியும் நீண்ட நேரம் பேசியிருக்கிறார்.

வலது கம்யூனிஸ்டின் விவசாய சங்க ஏடு ஒன்று ஜூலை 5-ம் நாள் நடந்த துப்பாக்கிச் சூடு துயரச் செய்தி களைப்பற்றி விளக்கமாக வெளியிட்டிருக்கிறது. மாணமதுரையில் போலீஸ் வெறியாட்டம்... பெத்தநாயக்கன் பாளையத்தில் படுகொலைகள்... அய்யம் பாளையத்தில் படுகொலைகள்......கோவில்பட்டியில் போலீஸ் துப்பாக்கிச் சூட்டுடன் தி.மு.க. விளாரல் கைகளுடன் ஏற்பட்ட படுகொலை......சாத்தூரில் வழி மறித்துச் சுட்ட கொடுமை... குலக்கரையில் சுதந்திரப் போராட்ட வீரர் நாராயணசாமியின் பேரன் 19-வயதுள்ள நம்பி மீது வாழைத் தோட்டத்துக்குள் ஒளிந்திருந்து போலீசார் சுட்டுக் கொன்ற கொடுமை...ஆகிய துப்பாக்கிச் சூடுகளை விபரமாக வெளியிட்டுள்ளது.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் விவசாய சங்கச் செயலாளர் எம் ஆதிமூலத்தின் சபதத்தையும், தமிழகத்தைச் சூழ அரசு போலீஸ்அராஜகமாகவும் கருணாநிதி மீது குற்றம் சாட்டி வலது கம்யூனிஸ்ட் எம் பி யான காத்தமுத்து விடுத்த அறிக்கையையும், சுட்டுக்கொல்லப்பட்ட விவசாயிகளின் படங்களையும், மாபெரும் மவுன ஊர்வலங்களின் படங்களையும் அந்த ஏடு வெளியிட்டுள்ளது.

இது போன்றே வலது கம்யூனிஸ்ட்கட்சியின் ஏட்டிலும் விபரமாகவும் ஆவேசமாகவும் துப்பாக்கிச் சூட்டுக்குப் பலியானவர்களின் படங்களைப் போட்டு, வீழ்ந்த மலர்களுக்கு வீர வணக்கம் செலுத்துவதாகவும் பிரசுரித்திருந்தது.

வலது கம்யூனிஸ்ட்டின் ஏ. ஐ. டி. யு. சி. சங்கச் செயலாளர் ஏ. சீனிவாசன் தலைமையிலான ஒரு குழு இராசபாளையம் சென்று போலீசாரும், திமுக வும் நடத்திய கொடுமைகளையும் கொள்ளை சூறைகளையும் நெருப்பிட்டுக் கொளுத்தியதைப் பற்றியும், மற்றும் அருப்புக்கோட்டை, மீளூர், அழகாபுரி, சாத்தூர் ஆகிய பகுதிகளுக்கும் சென்று விசாரணை நடத்தி "துப்பாக்கிச் சூட்டால் கொல்லப்பட்டவரின் உடலை, கட்டை வண்டிகளுக்கு மூட்டிய நிலில் தூக்கிப்போட நடந்த முயற்சிகளையும் உருக்கமாக விவரித்துள்ளார். அதுபோ—

ஆகஸ்டு மாதம் நடக்கவிருக்கும் சட்டமன்றக் கூட்டத்தில், வலது கம்யூனிஸ்ட், கே. டி. கே. தங்கமணியும், மற்றும் ஸ்தாபன காங்கிரஸ், இந்திராகாங்கிரஸ், சுதந்திரா கட்சி ஆகியவையும் சேர்ந்து, தி. மு. க. அரசு மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவருகிறது, துப்பாக்கிச்சூடுபற்றி விவாதித்து நீதி விசாரணை கோருவார்கள் என்றும் பத்திரிகைகள் செய்திகள் கூறுகின்றன. இதுமட்டுமல்லாது—

தி. மு. க. அரசின் போலீஸ், தி. மு. க. தமிழர் படையினரும் சேர்ந்து நடத்திய அடக்குமுறைகளையும் ஆகியவைபற்றி செய்யவிசாரணை இந்திரா காங்கிரஸ் அனுப்பிய எம்.பி.கள் குழுவும் வந்து போய்விட்டது.

சென்னையில் சி. சுப்ரமணியமும், மோகன்குமார மங்கலமும் கலந்து கொண்ட தமிழக இந்திரா காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில், "தி மு க ஆட்சியும் திமுக கட்சியும் சட்டத்துக்கும் ஒழுங்குக்கும் போலீசைப் பயன்படுத்தி இருக்கிறார்கள்"—என்று குற்றம் சாட்டியிருக்கிறது, அது போலவே!

ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் காமராசரும் ஆயிரம் குற்றச்சாட்டுகளைச் சாட்டியுள்ளார். ஊர் ஊருக்கு நீண்ட பெரும் மௌன ஊர்வலங்களும், தியாகிகளுக்கு அஞ்சலியும் நடந்திருக்கிறது.

எல்லாக் கட்சியினரும்...எல்லா ஊர்களிலும் துப்பாக்கிச் சூடுகள் பற்றி நீதி விசாரணை கோரியிருக்கிறார்கள்.

இத்தனை கட்சிகளின் குற்றச்சாட்டுகளுக்கு தி. மு. க. அமைச்சர்கள் என்ன பதில் சொல்லுகிறார்கள்?

"விவசாயிகளின் பேரைச் சொல்லிக்கொண்டு, நிலப்பிரபுக்களுக்குத் துணை போகின்ற வலது கம்யூனிஸ்ட் கட்சியினர் திட்டமிட்டு வன்முறைகளில் இறங்கியதால் தான், துப்பாக்கிச் சூடுகள் நடந்திருக்கின்றன கடையடைப்பிலோ ஊர்வலங்களிலோ இந்த அசம்பாவிதம் நடக்கவில்லை, துப்பாக்கி பிரயோகம் நடைபெற்ற கோவில்பட்டி, சாத்தூர், விருதுநகர், ஸ்ரீவில்லிப்புத்தூர் பகுதிகளை ஆகிய 5 இடங்களில் வலது கம்யூனிஸ்டுகள் பொதுமக்களின் சொத்துகளுக்கு நெருப்பு வைத்துக் கொளுத்தினார்கள், அதனால் தான் துப்பாக்கிச்சூடு நடந்தது"—என்று நெடுஞ்செழியன் குற்றம் சாட்டுகிறார்.

"10 பிணம் விழாதா? எடுத்து வைத்து ஆர்ப்பாட்டம் போடலாம் என்று சிண்டிகேட் காங்கிரஸ் பல ஆண்டுகளாகப் போட்ட திட்டத்தின் விளைவுதான் இவை"—என்று முதலமைச்சர் குற்றம் சாட்டுகிறார்.

இப்படி இரு தரப்பாரும் பரஸ்பரம் கூறும் வன்முறைக் குற்றச் சாட்டுகளைப்பற்றி, எதுதான் உண்மை என்று நாட்டு மக்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா?

நீதி விசாரணை நடத்தினால் தானே தெரியும்! அன்றைய பல்கலைக்கழக பட்டமளிப்புவிழா கலாட்டாவின் போது, போலீஸ் தடியடியால் இறந்தது இந்து கல்லூரி மாணவர் உதயகுமாரா? இல்லையா?—என்ற தகராறு எழுந்த போதும், நீதி விசாரணை நடத்தினதால் தானே, "இறந்தவர் உதயகுமார்தான்"— என்ற உண்மை வெளிவந்தது, கருணாநிதி தலையைத் தொங்கப் போட்டார்.

அதுபோல, நெய் வேலி துப்பாக்கிச் சூட்டுக்கு விசாரணை நடந்ததினால் தானே, "எம். ஜி. ஆர். குத்து, கலைஞர் அடி. அண்ணா உதை" எல்லாம் எப்படி இருந்தது?—என்பது தெரியவந்தது.

அதுபோல் ஜூலை 5-ல் நடைபெற்ற துப்பாக்கிச் சூடுகளுக்கும் அடக்குமுறைகளுக்கும் நீதி விசாரணை நடத்தினால்தானே போலீஸ் அத்து மீறல்கள் எப்படி இருந்தன? போலீஸ் சட்டவிரோத நடவடிக்கைகளும், அதிகாரிகளின் கண் மூடித்தனமான வெறிச் செயல்களும் எப்படி இருந்தன?—என்பதை அம்பலப்படுத்த முடியும!

ஆனால், துப்பாக்கிச் சூட்டுக் கொடுமைகளைப் பற்றி உருக்கமாகவும் விளக்கமாகவும் அறிக்கைவிடும் வலது கம்யூனிஸ்டுகளும்......இந்திரா காங்கிரசும்......... காமராசர் காங்கிரசும் சுதந்திரா கட்சி யினரும்—

முதலமைச்சர் கருணாநிதியிடம் சமரசம் பேசும் போது, நீதி விசாரணையை வற்புறுத்தினார்களா?......

கிடையாது!......

பின் என்னதான் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்?

"சுப்ரீம் கோர்ட் நீதிபதி அளவிலோ...... மற்ற மாநிலத்தின் நீதிபதிகள் என்ற அளவிலோ...... மாவட்ட நீதிபதிகள் என்ற அளவிலோ...... எந்த மட்டத்திலும் நீதி விசாரணை தேவையில்லை"— என்று ஒப்புக்கொண்டு, ஒருவர் பின் ஒருவராக கைநாட்டு வைத்திருக்கிறார்கள்.

கல்லறைகள் கேட்கின்றன! குண்டடிகளும், தடியடிகளும்பட்ட ஏழை மக்கள் கேட்கிறார்கள்! பாதிக்கப்பட்ட வியாபாரிகள் கேட்கிறார்கள்!

எங்களுக்கெல்லாம் நியாயம் கிடைக்காதா? நீதி விசாரணை நடக்காதா?—என்று.

மாண்டவர்களுக்கு கருணாநிதி கல்லறை கட்டினார்! நீதி விசாரணைக்கு நாங்கள் கல்லறை கட்டி விட்டோம்!— என்று சொல்லி விட்டார்கள் வலது கம்யூனிஸ்ட்டுகளும், சிண்டிகேட் காங்கிரஸ் தலைவர்களும், இண்டிகேட் காங்கிரஸ் தலைவர்களும், சுதந்திரா கட்சியினரும்!

இது எதைக் காட்டுகிறது?...

நாட்டு மக்களுக்கு நியாயம்கிடைக்க வேண்டுமென்பதைக் காட்டிலும்... காவல் துறையின் கொடுஞ் செயல்கள் அம்பலமாகி விடக்கூடாது என்பதில், இவர்களுக்கு உள்ள கருத்து ஒற்றுமையையும் அக்கறையையுமே காட்டுகிறது!

— ஐ. மா. பா.

# விவசாயிகள் உண்ணுவிரதம்

மதுரை, ஜூலை. 21—

உழைக்கும் விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வற்புறுத்தி தமிழகமெங்கும் ஜூலை 17-ல் உண்ணுவிரதப் போராட்டங்கள் நடைபெற்றன.

தமிழக முழுவதும் விவசாயத் தொழிலாளர்களுக்கு ரூ. 5 [illegible] நிர்ணயிக்க கோரியும், ஐந்து ஏக்கர் வரையுள்ள விவசாயிகளுக்கு மின் கட்டண உயர்வை ரத்து செய்யக் கோரியும், பத்து ஏக்கர்வரை வைத்துள்ள நடுத்தரவிவசாயிகளுக்கு கடன் நிவாரணம் அளிக்க வலியுறுத்தியும், பணப் பயிர்களாகிய பருத்தி, கடலை, மிளகாய்போன்றவற்றிற்கு விவசாயிகளுக்கு நியாய விலைகிடைக்க விலைப் பாதுகாப்பு அளிக்க வலியுறுத்தியும் தமிழகமெங்கும் விவசாயிகள் போராடி வருகின்றனர்.

## தேனியில்

விவசாயிகளின் 5 அம்ச கோரிக்கைகளை வலியுறுத்தி 17-7-72-ல் தேனியில் பஸ்ஸ்டாண்ட் சமீபம் மதுரை ரோட்டில்வெகுஜனஉண்ணுவிரதம் நடந்தது உண்ணுவிரதத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களும் விவசாய சங்க ஊழியர்களுமாக 75 பேருக்கு மேல் கலந்து கொண்டனர். காலை 6 மணிக்கு துவங்கி மாலை 6 மணிக்கு உண்ணுவிரதம் முடிவுற்றது.

உண்ணுவிரதத் தொண்டர்கள் பந்தலை அடையும் முன்னர் தேனி மாநகரின் தெருக்களில் கோஷங்களை முழங்கிய வண்ணம் சென்றனர் பின்பு பெரியகுளம் தாலுகா விவசாயிகள் சங்கச்செயலாளர் தோழர் வி. சொக்கலிங்கம் துவக்க உரையுடன் தோழர் பி. உசேன்மீர் தலைமையில் உண்ணுவிரதம் துவங்கியது. தோழர் எஸ். ராமையா அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

உண்ணுவிரதிகளைக் கடந்து சென்ற கிராம விவசாயப் பெருங்குடி மக்களும் நகரத்தொழிலாளி மத்தியதர வர்க்கப் பகுதியினரும் மார்க்சிஸ்ட் கட்சியின் கோரிக்கைகளே சரியானவை என உணர்ந்துள்ளனர். இதற்கு அவர்கள் மனமுவந்து உண்டியலில் அள்ளி அள்ளி காசுகளையும் நோட்டுகளையும் போட்டுச் சென்றதே சான்றாகும்,

மேலும் தோழர்கள் வி. எஸ். பாலகிருஷ்ணன், ஒ சீனிவாசன் எம். பால்ராஜ இரும்பொறை ஆகியோர் ஒலிபெருக்கி மூலம் விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கினர் இறுதியாக தோழர் பி. உசேன்மீர், வி சொக்கலிங்கம் ஆகியோர் கோரிக்கைகளை விளக்கிப் பேசினர்.

தேனித் தோழர் எஸ். ராமையா உண்ணுவிரதிகளுக்கு பழரசம் கொடுத்து உண்ணுவிரதத்தை முடித்து வைத்தார்.

## கோவில்பட்டியில்

கோவில்பட்டியில் விவசாயிகளின் கோரிக்கைகளை ஆதரித்து ஜூலை 17ம் தேதி தாலுகா அலுவலகம் முன்பாக உண்ணுவிரதம் நடந்தது. கோரிக்கைகளை ஆதரித்தும, துப்பாக்கி பிரயோகத்தை கண்டித்தும நகரின் முக்கிய வீதி வழியாக கோரிக்கைகளை வலியுறுத்தி கோஷங்களை முழங்கிக் கொண்டு தாலுகா அலுவலக முன்பாக வட்டாரக் கமிட்டிச் செயலாளர் எஸ். வெங்கிடு தலைமையில் வெகுஜன உண்ணுவிரதம் நடைபெற்றது.

மாலை 5மணிக்கு உண்ணுவிரதத்தை முடித்துவைத்து கோரிக்கைகளை விளக்கியும் உண்ணுவிரதத் தோழர்களுக்கு நன்றி தெரிவித்தும் தோழர் எஸ். வெங்கிடு, டி. பரமசிவம் பேசினர்.

உண்ணுவிரதத்தில் ஆண்களும் 4 பெண்களுமாக மொத்தம் 56 பேர் கலந்து கொண்டனர்.

## சங்கரன்கோவிலில்

சங்கரன்கோவிலில் விவசாயிகளின் கோரிக்கைகளை வலியுறுத்தி ஜூலை 17ம் தேதி உண்ணுவிரதப் போராட்டம் நடைபெற்றது.

உண்ணுவிரதப்போராட்ட வீரர்களும், மற்றும் விவசாயிகளும் அவர்களுக்கு ஆதரவாக தொழிலாளர்களும், இளைஞர்களும் நகரின் முக்கிய வீதிகளின் வழியாககோஷங்களை முழங்கிக்கொண்டே சென்று உண்ணுவிரதப் பந்தலை அடைந்தனர், அங்குதோழர் ஆர். எஸ். முப்பிடாதி தலைமையில் 20தோழர்கள் உண்ணுவிரதத்தில் பங்கு கொண்டனர்.

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் போராட்டம் தான் ஏழை விவசாயிகளின் பக்கம் நிற்பது என்று விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் உற்சாகமாக பேசினர் உண்டியல்மூலம்ரூ.56 வசூலானது.

## திருக்கோவிலூரில்

தமிழ் மாநில விவசாயிகள் சங்க அறைகூவலுக்கிணங்க ஜூலை 17ம் தேதி திருக்கோவிலூர் தாலுகா விவசாயிகள் சங்கம், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவற்றின் ஆதரவில் தோழர்கள் ஆர். தெய்வசிகாமணி தலைமையில் தோழர்கள் டி. வி. ராமன் ஜி தேவதாஸ், கே. எம். ஜெயராமன், ஆர். டி. ராமலிங்கம் மற்றும் தாலுக்காவிலுள்ள திருக்கோவிலூர், எடையார், திருவெண்ணை நல்லூர், சரவணபாக்கம் கிராமங்களிலிருந்து சுமார் 80 விவசாயிகள் கோரிக்கை கோஷங்களை முழங்கியவாறு ஊர்வலமாகச் சென்று திருக்கோவிலூர் கோட்டாட்சித் தலைவர் அலுவலகத்திற்கு முன் விவசாயிகளின்கோரிக்கைகளை வலியுறுத்தி காலை 6 மணிமுதல் மாலை 7மணிவரை உண்ணுவிரதம் இருந்தனர்.

இரவு 7மணிக்கு உண்ணுவிரதத்தை முடித்துக் கொண்டு ஊர்வலமாகச் சென்று நடைபெற்ற கூட்டத்தில் கலந்து கொண்டனர். தோழர் டி. வி. வெங்கடேஸ்வரன் உண்ணுவிரதப் போராட்டத்தில் கலந்து கொண்ட விவசாயிகளுக்கு நன்றிதெரிவித்து பேசினர்.

## வேதாரண்யத்தில்

திருத்துறைப்பூண்டி தாலுகா வேதாரணியத்தில் துணைத் தாசில்தார் அலுவலக முன்பாக 12—7—72-ந் தேதி பகல் 2 மணிக்கு தோழர் கே. தருமலிங்கம் தலைமையில் ஆர்ப்பாட்டம்நடந்தது. மகஜர் கொடுக்கப்பட்டது. சுமார் 200 பேர்கள் கலந்து கொண்டார்கள்.

இதுவரையில் கட்சியின் சார்பில் இங்கு இம்மாதிரி ஆர்ப்பாட்டமும் மகஜர் கொடுப்பதும் கிடையாது.

### உண்ணுவிரதம்

17-7-72ல் திருத்துறைப்பூண்டி வேதாரண்யம் துணைத் தாசில்தார் அலுவலக முன்பு தோழர் கே. தருமலிங்கம் தலைமையில் உண்ணுவிரதம் நடந்தது. 50 தோழர்கள் உண்ணுவிரதமிருந்தார்கள். வேதாரண்யம் நகருக்கு தோழர்கள் முதல் நாள் இரவே வர ஆரம்பித்து விட்டார்கள். கடைவீதிவழியாக கோஷங்கள் முழங்க கோஷங்கள் தாங்கிய அட்டைகளுடன் தொண்டர்கள்உற்சாகமாக உண்ணுவிரதத்தில் கலந்து கொண்டார்கள். தோழர் என். மணியன் உண்ணுவிரதத்தை துவக்கிவைத்துப் பேசினர்.

இந்த பகுதியில் இந்த கோரிக்கை பொதுவாக வரவேற்கப்படுகின்றன இங்கு மிளகாய், புகையிலை தான் முக்கியமாக பயிரிடுகிறார்கள். மிளகாய், புகையிலைகளை வர்த்தக சூதாடிகள் தங்களிடம் குறைந்த விலைக்கு வாங்கி கொள்ளை லாபமடிக்கிறார்கள்.

## திருத்துறைப் பூண்டியில்

திருத்துறைப்பூண்டி தாசில்தார் அலுவலக முன்பு ஆண்களும், பெண்களும் கலந்து கொண்ட எழுச்சி மிக்க ஆர்ப்பாட்டம் 12-ந்தேதி நடந்ததில் ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் ஊர்வலமாக தாசில்தார் அலுவலகம் வந்து சேர்ந்தார்கள். தாலுகா கமிட்டி செயலர் என் மணியன், ஆர். கோவிந்தசாமி (மாவட்ட கமிட்டி உறுப்பினர்) எஸ். கோபால் (தா வி தொ ச தலைவர்) எம் வேதையன் (தா வி தொ ச செயலர்)ஆகியோர் மகஜரை தாசில்தாரிடம் சமர்ப்பித்தார்கள்.

தாசில்தார் இந்த மகஜரை சர்க்காருக்கு அனுப்பி வைக்கிறேன் என்று சொன்னார். தொடர்ந்து ஊர்வலம் கடைத்தெரு வழியாக தெற்குவீதி வந்து சேர்ந்தது. அங்கு தோழர் ஜி. முனியப்பன் (கிளை செயலர்) தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தன. தோழர் வி.ராமதாஸ் எம். வேதையன் என்.மணியன், ஆர். கோவிந்தசாமி கோ. விசையன் ஆகியோர் தி மு க போலீஸ் அடக்குமுறையை கண்டித்தும் விவசாயிகளின் — விவசாயத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வலியுறுத்தியும் பேசினர்.

### உண்ணுவிரதம்

திருத்துறைப்பூண்டி தாலுகா தாசில்தார் அலுவலகம் முன்பு 300க்கு மேற்பட்டவர்கள் உண்ணுவிரதம் இருர்தனர்.

தோழர் பி. எஸ். தனுஷ்கோடி தலைமை வகித்தார். உண்ணுவிரதம் இருக்கும் தோழர்கள் இரவே நகரை நோக்கி வரத் தொடங்கி விட்டார்கள்.

திருத்துறைப்பூண்டி தாலூகா முழுவதும் இன்று வேலை நிறுத்தம் செய்துள்ளார்கள்.

## மாயூரம்

மாயூரத்தில் தோழர் வி. ஆர். செல்லப்பன் தலைமையில் 54 தோழர்கள் ஆர். டி. ஒ. அலுவலகம் முன்பு உண்ணுவிரதம் இருந்தார்கள். விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கி தோழர் வி. ஆர். செல்லப்பன் பேசினார்.

## நெய்வேலியில் மாபெரும் ஆர்ப்பாட்டம்

நெய்வேலி, ஜூலை. 21— நெய்வேலி கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்)கட்சி ஏரியா கமிட்டி சார்பில் 150 பேர் கொண்ட தொழிலாளர்கள் ஜூலை 12-ல் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

டவுன்ஷிப் முடக்குப் பால (ஸ்க்யூ பிரிட்ஜ்) த்திலிருந்து ஊர்வலமாகச் சென்று நில ஆர்ஜித துணை கலெக்டர் அலுவலகம் முன்பு மாலை 5 மணிக்கு ஆர்ப்பாட்டம் செய்தனர். விவசாய றொழிலாளர்கள், விவசாயிகளின் நான்கு அம்ச கோரிக்கைகளை வலியுறுத்தியும், சமீபத்தில் நடந்த அரசு போலீஸ் அடக்குமுறைக்கு கண்டனம் தெரிவித்தும் மகஜர் ஒன்று துணை கலெக்டரிடம் கொடுக்கப்பட்டதுமாவட்ட கலெக்டர் மூலம, முதலமைச்சருக்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப்பட்டது,

ஊர்லலம் பின்னர் மந்தாரகுப்பம் கடைவீதி வழியாக வந்து பொதுக்கூட்ட இடத்தை அடைந்தது.

பொதுக்கூட்டத்திற்கு தோழர் ராஜு தலைமை வகித்தார். தோழர்கள் நடராஜன் (மாவட்ட கட்சி செயலாளர்), கே,திருவேங்கடம், ரத்தினசபாபதி ஆகியோர் பேசினர்.

தேனியில் தோழர்கள் உண்ணுவிரதம் இருந்தபோது எடுத்த படம்

# அமெரிக்க குண்டு...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

பள்ளிகளுக்கும், கடைகளுக்கும், ஒன்றுமறியா மக்களுக்கும் இழைத்திருக்கும் அழிவையும், நாசத்தையும் என் இரு கண்களால் கண்டேன்.

வெடிகுண்டுகளால் தாக்கப்பட்ட வீடுகளுக்கருகில் கருகிப் போன மொட்டை மரங்களில் எரிந்து போன துணிகளின் மிச்ச சொச்சங்கள் தொங்கிக் கொண்டிருக்கும் மிகப் பயங்கரமான காட்சியினைக் கண்டேன். பல மனித உறுப்புகளின் துண்டுகள் ஆங்காங்கு சிதறிக் கிடக்கும் கோரமான காட்சியைப் பார்த்தேன்.

## முதியவரின் வீரம்

அழிக்கப்பட்ட ஒரு வீட்டின் இடிபாடுகளுக்கிடையில் ஒரு முதியவர் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தேன். அவர் தனதுமனைவி, ஒரே மகன், பேரன் ஆகியோர் கொல்லப்பட்ட துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். அவர் தனது முஷ்டியை உயரே தூக்கி எனதுஇதயம் அமெரிக்கர்களின் மீதான வெறுப்பால் இரும்பாகிக் கொண்டிருக்கிறது என்று கூறினார்.

முக்கியமான அடுத்த விஷயம் அணைகளைப் பற்றியது. அடுத்த மாதம் மழை காலத்து வெள்ளத்திலிருந்து பாதுகாக்கவும், வறண்ட காலத்தில் பாசனத்திற்கு உதவவும் மிகவும் அத்தியாவசியமானவைகள் அணைகள். அணைகளின் மீது அமெரிக்க வெடிகுண்டுகள் வீசப்பட்டன என்பதில் சந்தேகமே இல்லை, நானே அத்தகைய தாக்குதல்களை நேரில் கண்டேன்

இதன் விளைவு மிக உறுதியான தன்னம்பிக்கைதான். வாழ்வா — சாவா என்ற வீரப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறோம் என்று வடவியட்னம் மக்கள் உணர்ந்திருக்கிறார்கள். தாங்கள் வாழவேண்டுமானால் என்ன விலை கொடுத்தாலும், யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதில் அவர்கள் உறுதியுடனிருக்கிறார்கள். என்று கூறி தனது கட்டுரையை முடிக்கிறார் ஜோசப்கிராப்ட்.

கூட்ட நிகழ்ச்சிகள் தொடங்கு முன் பகுத்தறிவாளர்களின் மறைவுக்கும், தமிழ்நாட்டில் அண்மையில் பல போராட்டங்களில் உயிர் நீத்தவர்களுக்கும் இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

''இந்த நாட்டு பெரும்பான்மை மக்கள் வளமான வாழ்க்கையும் சமமான உரிமையும் பெறும் விதத்தில், நாட்டின் சட்டங்களையும் நடைமுறை விதிகளையும் உடனடியாக மாற்றி அமைக்க வேண்டும்என்றும் மற்றும் சாதி ஒழிப்பு, மத வெறி மூடநம்பிக்கைஒழிப்பு பாடப் புத்தகங்களிலும் பள்ளிகளிலும் மதஉணர்ச்சி ஊட்டுவதைத் தடுத்தல் ஆகியவைபற்றி ஒன்பது தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பின்னர் பேரவையின் 1972-73-ம் ஆண்டுக்குரிய செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. அமைப்பாளராக டாக்டர் சாலை இளந்திரையன் பொதுச்செயலாளராக திரு நாத்திக நந்தனார், பொருளாளராக திரு. மணிமாறன் ஆகியோர் தேர்ந் தெடுக்கப்பட்டனர்.

## பள்ளிகளில் மத உணர்ச்சி ஊட்டு தலைத் தடுத்திடுக

### அறிவியக்கப் பேரவைதீர்மானம்

சென்னை, ஜூலை. 21— அறிவியக்கப் பேரவையின் முதலாவது ஆண்டு பேரவைக் கூட்டம் 9-7-72ல் பேரவை அமைப்பாளர் டாக்டர் சாலை இளந்திரையன் தலைமையில் புதுப்பெருங்களத்தூரில் நடைபெற்றது.



இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, மூதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே முத்தையா